வெளியீடு எண். 367

உ

குருபாதம்

ஆதீன குருமுதல்வர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அருளிய

# ஞானாவரண விளக்கமும்

வெள்ளியம்பலவாண சுவாமிகள் அருளிய

# மாபாடியமும்

(முதல் மூன்றுபாகம்)

1. பரபக்கம் 2. ஞானந்தம் 3. அளவியல்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் 25-ஆவது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

திருவுளப்பாங்கின்வண்ணம் வெளியிடப்பெற்றது.





1957

[ தருமபுர ஆதீனம்

# ஞானாவரண விளக்கமும்

# வெள்ளியம்பலவாண மாபாடியமும்

உ

குருபாதம்

துன்முகி ஆண்டு வைகாசித் திங்கள் 17ஆம் நாள் (30—5—'56) புதவாரத்தன்று ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளுக்குரிய குருபூஜை விழா மலராக வெளியிடப்பெற்ற இந்த ஞானவரண விளக்கமும் வெள்ளியம்பலவாண மாபாடியமுமான நூல் இஞ்ஞான்று ஹேவிளம்பி ஆண்டு ஆவணி மூல (3—9—1957 மங்கள வாரம்) நன்னாளில் கட்டடம் செய்யப்பெற்றுச் சைவசித்தாந்த நல்லுலகில் திருவுலா வர முற்படுகிறது.



தருமபுர ஆதீன குருமுதல்வர்,

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# நூன்முகம்

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தான வழிவந்த சித்தாந்த சாஸ்திரம் பதினான்கு. அவற்றுள் சில மிகச் சுருக்கமாய் நுண்ணறிவும் தீவிரதர சத்திநிபாதமுமுடைய பெரியவர்களுக்கே அரிதில் உணரத்தக்கன. மற்றும் சில சாஸ்திரத்தில் விளக்கப்படவேண்டிய விஷயங்களுள் சிலவற்றை மட்டும் கூறிப் போந்தன. ஸ்ரீ அருணந்திதேவ நாயனார் இயற்றிய சிவஞான சித்தியாரோ பரபக்கம், அளவியல், சுபக்கம் இவைகளையும் இவற்றில் விளக்கப்பட வேண்டிய எல்லா விஷயங்களையும் விரிவாகவும் தெளிவாகவும் கூறுகிறது. ஆகையினாலேயே "பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே ஓர் விருத்தப் பாதி போதும்" என்ற தனிப்புகழ்பெற்று விளங்குவதுமன்றி எங்கள் ஆதீனத்தில் பிரமாண நூல்களுள் தலைசிறந்ததாகப் போற்றப்படுகிறது.

ஆதீன குருமுதல்வர் சிறந்த அநுபூதிமான். தான்பெற்ற இன்பம் இவ் வையகம் பெறுக என்ற பெருங்கருணைகொண்டு சிவஞானசித்தியார் அளவிலும் விரித்துணர்த்தப்படும் விஷயங்களிலும் மிக விரிந்ததேயாயினும் அதிலும் கூறப் படாமல் குறிப்பாலுணர்த்திச் சென்ற பல விஷயங்களைக்கண்டு ஆங்காங்குப் பல செய்யுள்களை இயற்றிச் சிவஞான சித்தியுடன் கூட்டினர். இவ்விதம் ஒன்று சேர்ந்த நூலே **ஞானாவரண விளக்கம்** ஆகும். ஆவரணம் - மறைப்பு என்று பொருள்படும். அதுபோலவே பரிவாரமாக வுள்ளவைகளையும் ஆவரணம் என்பர். நவாவரண பூசை, பஞ்சாவரண பூசை என்ற விடங்களில் பிரதான தேவதையைச் சூழ்ந்துள்ள பரிவார தேவதைகளுடன் பூசித்தல் என்ற பொருளில் வருவது காண்க. அதுபோலவே ஈண்டும் ஞானம் பெறுதற்கு அங்கமாகவுள்ள தத்துவ விவேகம் முதலிய பலவற்றையும் விளக்குதலின் ஞானாவரண விளக்கம் என்ற பெயர் பெற்றது.

தருமை ஆதீனம் நான்காவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடம் சந்நியாசம்பெற்று, காசிக்குச்சென்று ஸ்ரீ குமரகுருபரஸ்வாமிகளிடம் கல்வி பயின்றவரும், தருமை ஆதீனம் ஐந்தாவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ

ஞானசம்பந்ததேசிகரிடம் தீக்ஷைபெற்றவருமான வெள்ளியம்பலவாணசுவாமிகள் ஆதீன குருமுதல்வர் இயற்றிய முக்தி நிச்சயத்திற்குப் பேருரை எழுதியுள்ளார். அதுபோன்றே குருமுதல்வர் இயற்றிய ஞானவரண விளக்கத்திற்கும் ஒருரை யெழுதி **ஞானவரண விளக்கத் தரும்பத விவேகம்** எனப் பெய ரிட்டனர். ஆசிரியரிட்ட பெயரை நோக்கின் ஒரு சிற்றுரைபோலத் தோன்றினும் அதை வாசித்துப் பார்ப்பவர்களுக்கு அது ஒரு மாபாடியம்போல் தோன்றுதலால் வெள்ளியம்பலவாணர் மாபாடியம் என்றே பெயர்பெற்று விளங்குகிறது.

सूत्रस्थं पदमादाय वाक्यैः सूत्रानुसारिभिः ।
स्वपदानि च वर्ण्यन्ते भाष्यं भाष्यविदो विदुः ॥

என்ற பாஷ்ய லக்ஷணம் பொருந்தி யிருப்பதும் கருதத்தக்கது.

சமயங்கள் புறப்புறச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், அகச்சமயம் என நான்கு வகைப்படும். சைவ சமயத்திற்குப் பூர்வபக்ஷமாயுள்ள மற்றச் சமயங்களை ஆராய்ந்து அவற்றிலுள்ள குற்றங்களை நன்கு வெளிப்படுத்தாத வரையில் சைவ மதத்தை எவ்வளவுதான் விரிவாக எடுத்துரைத்தாலும் கேட்ப வர்களுக்கு மேன்மேலும் ஐயம் நிகழ்ந்துகொண்டே இருக்குமாதலின் சகல மதங்களையும் ஞானவரண விளக்கத் தரும்பத விவேகத்தில் சுருக்கமாகவும் தெளிவாகவும், அவற்றிற்குரிய பிரமாணங்களைக் காட்டியும் தருக்கரீதியில் ஆசிரியர் ஆராய்கின்றனர். இப்பொழுது வெளியிடப்படும் இந்நூலில் பரபக்கத்தில் அகப்புறச்சமயம், சித்தாந்தத்தின் சங்கிரஹ ரூபமான ஞானந்தம், அளவியல் என்னும் மூன்று பாகங்கள் உள்ளன. முதற் சூத்திரம்முதல் சுபக்கம் தொடர்ந்து அச்சாகி வருகிறது.

இதன் முதற்பகுதியில் அகப்புறச் சமயமாயுள்ள வாமம், வைரவம், தக்ஷிணம் என்ற மூன்று மதங்களும் அம்மதங்களின் பூருவபக்ஷமாயுள்ள மதங் களும் அம்மத சித்தாந்தங்களும் உணர்த்தப்படுவதோடு உரையிற் கோடலால் கௌளமதம் முதலியனவும் கூறப்படுகின்றன. தக்ஷிண சைவ சித்தாந்தத்தை அனுசரிக்கும் வீரசைவமும் அதன் பிரமாணமாகவுள்ள நவலிங்க லீலை முதலி யனவும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. பிறகு, அகச் சமயமும் அதன் மறுப்பும் இடம் பெறுகின்றன. அகச் சமயங்களுள் காளாமுகம் (இதை சோம சைவம் என்பாரும் உளர்) காபாலம், தாந்திரிக பாசுபதம், வைதிக பாசுபதம் மகாவிரதி என்ற சுவதந்திரபேதமாயுள்ள மதங்களும் அவற்றின் மறுப்பும் இடம் பெற்றுள்ளன. சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம்,

சரியையில் ஞானம் என்ற நான்கு பாகுபாடுகோண்ட தாதமார்க்கம், இம்மாதிரியே பாகுபாடுடைய புத்திர மார்க்கம் முதலியனவும் கூறுப்படுகின்றன. இம் மதங்களைக் கன்மாந்தம், ஞானாந்தம், என்று இருவகையனவாக்கி, கன்மாந்தத்தையும் பதமுத்தி மதம், பரமுத்தி மதம், என இரு கூருக்கிச் சொல்லுகிருர். யோகத்தில் யோகம்வரையிலுள்ள மதம் கன்மாந்தத்தில் பதமுத்தி மதம் எனவும், யோகத்தின் ஞானம் பரமுத்தி மதம் எனவும் கூறப்படுகிறது. நிஷ்களயோக மதம், சைவ சாங்கிய மதம், பரமுத்தி வாத மதம், யோக ஞானமதம் எனினும் ஒன்றே. அது ஞானாவரண சித்தாந்தத்திற்கு அங்கமாகும். பரமுத்தி மதங்களில் ஐக்கியவாதி, பாஷாணவாதி, பேதவாதி, நான்கு வகையான சிவ சமவாதி சங்கிராந்தி வாதி, ஈசுவர அவிகாரிவாதி, பரிணாமவாதி, இலய சைவர், சிவசம வாதியான அபிவியத்தி சமவாதியின் அவாந்தர பேதமான சிவாதாதிக்கவாதி இவர்களின் மதங்களும் அவற்றின் முக்திநிலைகளும் அவற்றிற்குரிய பிரமாணங்களும் சொல்லப்படுகின்றன. இதுவரையில் முதற்பகுதி.

ஞானாந்தத்தை ஆரம்பத்திலேயே விரிவாகக் கூறின், மாணவரினி துணரமாட்டாராதலின் அளவியலுக்கு முன்னதாக ஞானாந்தத்தை சங்கிரஹ ரூபமாகக் கூறுவது இந்நூலின் இரண்டாம் பகுதி. p.367

மூன்றும் பகுதியில் சிவஞானசித்தியாரை ஒட்டி அளவியல் கூறப்படும். ஆயினும், முதற்கண் பிரமாண சாமான்யலக்ஷணம், விசேஷ லக்ஷணம், பிற மதத்தினர் கூறும் அளவைகளெல்லாம் சித்தாந்தத்திற்கோண்ட பிரத்யக்ஷம் அனுமானம், ஆகமம் என்ற மூன்றனுள் அடங்கும் முறை இவற்றைக்கூறி, பிரத்யக்ஷம் அநுமானம், ஆகமம் இவற்றின் விரிவான லக்ஷணம் கூறப்படுகிறது. பிறர்கூறும் அநுமானங்களைக் கண்டிக்க, ஏதுப்போலி பக்கப்போலி, திருஷ்டாந்தப்போலி முதலிய ஏத்வாபாசங்களும் நிக்கிரஹஸ்தானம் (தோல்வித்தானம்) முப்பத்திரண்டும் விரிவாக உதாரணத்துடன் விளக்கப்பட்டிருக்கின்றன.

அரும்பதவிவேகத்தில் நூற்றுக்கு மேற்பட்ட வடமொழியிலுள்ள ஆகமம், ஆகமப்பிரகரண நூல்கள், நியாய, வேதாந்த மீமாம்ஸா சாஸ்திர நூல்கள், பல காவியங்கள் தோத்திரங்கள், தமிழ் மொழியிலுள்ள தேவாரம், திருவாசகம் சமயசம்பந்தமான பிரகரண நூல்கள், இலக்கண நூல்கள், பரிபூரணசித்தி, தத்வாமிருதம், தத்துவப் பிரகாசம், அறிவானந்த சித்தியார், நிராமய தேவர் நூல், சத்திநிபாத அகவல் திருமந்திரம் ஆகிய பல நூல்கள் மேற்கோள்களாக் காட்டப்பெற்றுள்ளன.

மேற் கோளாகக் காட்டிய நூல்களிலும் பாடபேதம் காணப்படின் ஆராய்ச்சியுடன் உண்மையான பாடத்தை நிலைநிறுத்தி மற்ற பாடத்தைக் கண்டிக்கும் அழகு தனிப்பட்டது. உதாரணமாக பக்கம் 53, 54, 55 இவைகளில் 'பெற்ற நல்லாகமம்'' என்ற திருமந்திரத்தை ஆராய்வது நோக்கத்தக்கது, மேலும் தந்திரம் ஒன்பது; அவற்றினின்றும் ஆகமம் இருபத்தேட்டு; (இவ்விருபத்தேட்டு காமிகாதிகளைத்தவிர மற்றொரு வகையாகவும் கூறப்பட்டது) அவற்றின் உபபேதம் உபாகமங்கள் (இவை 207, 224, 228 என மூன்றுவகையாகக் கூறப்பட்டிருக்கின்றன) எனல் ஆராய்ச்சிக்குரியது.

ஞானாவரணவிளக்கச் செய்யுள்கள் பெரும்பாலும் கிடைக்கவில்லை. அரும்பத விவேகத்தில் ஆங்காங்கு மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டவைகளினின்றும் ஒன்று சேர்க்க வேண்டியிருக்கின்றன. இவ்வாறு சேர்த்துக் காட்டப்பட்டவைகளே 73, 81, 119, 121, 205, 206, 207, 217, 218, 219, 220, 221 முதலிய செய்யுள்கள்.

மூலப்பிரதியில் ஆங்காங்கு செல்லரித்தமையால் புள்ளியிடப்பட்ட பாகங்கள் அப்படியே அச்சிடப் பட்டிருக்கின்றன. நூல் மிகப் பெரியதாக இருப்பதாலும், எழுத்துக்களை உபயோகிப்பதில் தமிழ் ஸம்ஸ்கிருதம் என்று வேற்றுமையின்றித் தமிழ்ச் செய்யுட்களை ஸம்ஸ்கிருத எழுத்துக்களிலும் ஸம்ஸ்கிருத சுலோகங்களை தமிழ் எழுத்துக்களிலும் மாறி மாறி எழுதியிருப்பதாலும், விஷயங்களில் பல பிழைகள் இருக்கலாம். அச்சிடப்பட்ட பிறகு திருத்தப்படவேண்டியவை எனத்தோன்றின. மூலத்திற்கு பழுது உண்டாகாமல் இருக்கவேண்டும் என்ற ஒரே நோக்கம் கொண்டு அச்சிடப்படுகிறது. மேற்கோளாகக் காட்டப்பட்ட நூல்கள் பல கிடைக்கவில்லை. அவைகளும் பல இடங்களிலிருந்து கையெழுத்துப் பிரதிகளாகவும், ஏடுகளாகவும் சேகரிக்கப் படுகின்றன. இவைகள் மேல் ஆராய்ச்சிக்கும், நூலின் முடிவில் பிழை திருத்தம் முதலியன காண்பிக்கவும், மறு பதிப்பில் நல்ல முறையில் வெளியிடவும் பயன் படும்.

இந்த அரிய ஞானாவரணவிளக்கத்தை அரும்பத விவேகத்துடன் ஆராயவும், ஆராய்ந்து அச்சிற் பதிப்பிக்கவும், தமிழுலகுக்கும் சைவ உலகுக்கும் புதியனவான செய்திகள் பலவற்றை அறிவதற்கும் அறிவிப்பதற்கும் எனக்கும் வாய்ப்புத் திருவருளால் கிடைத்தது. இதனை நினைக்கும்போது கரும்புதின்னக் கூலி போல என்ற பழமொழி நினைவில் எழும். தாமின் புறுதல் உலகின் புறுதல் என்ற வண்ணம் எனக்கும் அளித்த இப்பெரும் பணியைத் திருவருளே துணை

யாகக்கொண்டு அவனருளே கண்ணாகக்கொண்டு ஆராயக் கூடிய வாய்ப்பை அளித்த தருமையாதீனம் இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவர்களுக்குப் பணிவுடன் கூடிய நன்றியைச் செலுத்துகின்றேன்.

இப்பணி யருளப்பெற்றவரும், எனக்கு உறுதுணையாயிருந்து உதவியும், தாமும் ஆராய்ந்தும், ஆராயுங்கால் என்னையும் கலந்து அளவளாவியும், ஆராய்ச்சிக் குறிப்புக்களால் பதிப்பை அழகுபடுத்தியும் உதவியவரும் ஆகிய இவ்வாதீனப் புலவர், ஆதீனக் கல்லூரிப் பிரின்ஸ்பால், சித்தாந்த ரத்நாகரம் சித்தாந்த சிரோமணி, முதுபெரும் புலவர், மதுரகவி முத்து. சு. மாணிக்கவாசக முதலியாரவர்களுக்கு எனது நன்றி.

வாழ்க சைவ நீதி ! வழங்குக வையமெல்லாம் !!

இங்ஙனம்
**K. இராசகோபால சாஸ்திரி**
வடமொழிப் பேராசிரியர், ஓரியண்டல் காலேஜ், தருமபுரம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# அணிந்துரை

## குருஞானசம்பந்தர் வணக்கம்

இருமையிரு வினைப்பயனற் றேருருமையருள் வாழ்வளித்துள் இன்ப வீடு
தருமையிரு காரியமும் பதிருறு கலையபிரா சாத யோகும்
அருமையிரும் பூசையுடன் பெரும்போருள்வார்த் தையும்நல்கும் ஆசான் எங்கள்
தருமையிருந் தோளிர் முதன்மைக் குருஞான சம்பந்த சாமி போற்றி.

## வேள்ளியம்பலவாணர் வணக்கம்

கள்ளி யம்பல களிசெயும் போருளேன வுலகைத்
தள்ளி யம்பலத் தாடுமோர் தனிமுதல் கழலே
யுள்ளி யம்பல நிறைந்தநூல் களையுவங் துதவும்
வேள்ளி யம்பல வாணனைத் தோழினறும் வினையே.

## குருசந்தானம்

சைவசித்தாந்தம் நாடேங்கும் பரவி விளங்கியிருந்த காலத்தில் தேன் மோழி வடமோழி பலவற்றிலும் நூல்கள் தோன்றின. தேன்மோழிகளான தமிழ், மலையாளம், கன்னடம், தேலுங்கிலும் சைவசித்தாந்த நூல்கள் உள்ளன. தாம் பேசும் மோழியில் தம் சமயத்துண்மைகளை எழுதுவது சமயப் புலவர்க்கு இயல்புதானே! அங்கனம் தமிழ்ப் புலமையும் சிவநேறி யோழுக்கமும் திருவருளுபதேசமும் வாய்ந்து விளங்கியவர்கள், தமிழிலே செய்த சைவசித்தாந்த நூல்கள் பற்பல உள்ளன. அவற்றின் போருள் திருக்கைலாயத்திலிருந்து குருபரம்பரையில் வந்ததாகும். அப்போருளின் விளக்கமே குருபரம்பரையினுல் நம்மனோர்க்கு எய்துவதாகும். அத் திருக்கைலாய பரம்பரைக் குருசந்தானத்தின் பல கிளைகளுள்ளே தருமையாதீன குருசந்தானம் ஒன்று. இதற்கு முதல்வ ராகிய ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள், 'ஞானவரண விளக்கம்' என்னும் இந்நூலை அருளினுர்கள். அவர்களால் நூல் மரபு, உபதேச மரபு ஆகிய இரண்டும் இத்தருமை யாதீனத்து வழக்கில் இருந்து வருகின்றன.

## ஞானாவரண விளக்கம்

‘மெய்கண்ட நூல்கள்’ எனப் புகழ்ந்து போற்ற விளங்கும் தமிழ்ச் சாத்திரங்களுள்ளே மெய்கண்ட தேவ நாயனார் அருளிய சிவஞான போதமே முதல் நூல் அதன் வழி நூலாயும் செய்யுள் உருவிலான உரைநூலாயும் திகழ்வது அருணந்திதேவ நாயனார் அருளிய ‘சிவஞான சித்தியார்’. அது பரபக்கம் சுபக்கம் என்று இருதிறத்ததாகும். அவ்விருதிறத்தினையும் விரித்துரைக்கும் பெருவிளக்கமாகத் தருமைக் குருமுதல்வர் குருஞான சம்பந்தர் ‘ஞானாவரண விளக்கம்’ என்னும் இதனை அருளினார்கள். ஞானம் - சிவஞானம். ஆவரணம் - சூழல்; (மறைப்பு). ஞானாவரணம் - சிவஞானச் சூழ்நிலை. அச்சூழ்நிலையை விளக்குவது ஞானாவரணவிளக்கம். ஞானத்தாற் சூழப்பெற்ற நிலையே ஞானாவரணம் ஆகும்.

## நூலமைப்பு

‘ஞானாவரண விளக்கம்’ சிவஞான சித்தியார்க்கு விளக்கம் ஆயினும், அதனைப்போன்று வேறு தனி நூலன்று. அச்சிவஞான சித்தியாரைத் தன்னகத்துக் கொண்டு அமைந்ததோரு நூலாகும். ஞானாவரண விளக்கச் செய்யுட்கள் அனைத்தும் விருத்தப்பாக்கள் என்பது பெரும்பாலான பகுதியால் அறியப்படுகின்றது. அவை யெல்லாம் முழுவுருவிற் கிடைக்கப் பெறல்வேண்டும். பேருரைகொண்டு சில பாக்களின் உருவம் அறியலாயிற்று. இது வடமொழியிலும் இருக்கின்றது.

## பரபக்கமும் சுபக்கமும்

புறப்புறம், புறம், அகப்புறம், அகம் எனச் சமயம் நால்வகைப்படும். அவற்றின் கோள்கையும் மறுப்பும் ‘பரபக்கம்’ என்பதில் அடங்கும். அந்நால்வகையும் கடந்த தனிமுதற் சமயமே சுத்தாத்துவித சைவசித்தாந்தம். அதன் விளக்கமே சுபக்கம். பரபக்ஷம் - பிறசமயக் கோட்பாடு. சுவபக்ஷம் - சைவ சித்தாந்தக் கோட்பாடு. சுபக்கத்திலே அகச் சமயங்களின் கோட்பாடுகளிற் சிற்சில, சைவசித்தாந்த நோக்கத்திலே, சுபக்கத்திலும் கூறப்படும். அறுவகைச் சமயங்களையும் பூருவபக்கம் செய்து நாட்டிய சித்தாந்தமே சிவஞானசித்தியாரது முடிபாகும்.

## கன்மாந்தமும் ஞானாந்தமும்

‘சைவசித்தாந்தம்’ என்னுந் தொடரிலுள்ள சைவம் என்பது ‘சுத்தசைவம்’ என்னும் சௌமிய சைவத்தைக் குறிப்பது. அசுத்த சைவம் ஆகிய பாசுபதம் முதலியவற்றை நோக்கிச் ‘சுத்த சைவம்’ எனப்பட்டது. (பக்கம். 3. பார்க்க)

அச் சௌமிய சைவத்துக்குப் பூருவபாகம் ஆன 'கன்மாந்தம்' பூருவபட்சம் ஆகும். சௌமிய சைவத்தின் முடிபாகிய 'ஞானந்தம்' சித்தாந்தம் ஆகும். இதுவே சைவசித்தாந்தம். இந்நூலின் ３６３ ஆவது பக்கம் வரையிலே கன்மாந்தமும் அதன்பின் ஞானந்தமும் கூறப்பட்டன. இம் மாபாடியத்தில் அகத்தில் அகப்புறச் சமயம் முதலாக உள்ள பகுதியே இப்போது கிடைத் திருக்கின்றது.

## மாபாடியம்

'நூல்' சுருங்கச்சொல்லி விளங்க வுணர்விக்குங் கருவி. 'உரை' அச்சொற் சுருக்கத்தின் அமைந்த பொருட்பெருக்கத்தை உணர விளக்குவது. 'நூல்' முதலும், வழியும், புடையும் ஆகவும் அவ்வழி தொகையும், வகையும், விரியும், மொழிபெயர்ப்பும் ஆகவும் பலவகைப்படும். அவற்றுள் இது விரியின் பாற்படும். உரையும் அருஞ்சொற்பொருட்குறிப்பு, கருத்துரை, பொழிப்புரை, சொற்பொருள், விரித்துரை, சிற்றுரை, பேருரை நுட்பம், எச்சம் முதலியன ஆகப் பலவகைப்படும். நூலின் சொற்சுருக்கத்தால், நூலாசிரியரது அகத்தைத் தேர்ந்துணர்ந்து, பொருட் பெருக்கத்தை நல்கும் பேராற்றல் உடையவரே உரையாசிரியர் ஆவர். நூலாசிரியர் செய்யும் உதவி பேருணர்வினர்க்கே பயன் படும். உரையாசிரியர் செய்யும் உதவி அப் பேருணர்வினராக அவரவும் சிற்றுணர்வினர்க் கெல்லாம் பயன் படும். அவ்வாறு செய்யுந் திறத்தில் உரை யாசிரியர் மிக்க ஆற்றல் வாய்ந்தவராயிருத்தல் வேண்டும். இம் மாபாடியம் அதன் இலக்கணத்திற்குரிய நெறியில் அமைந்துள்ளது. பாடியத்தின் இலக் கணம் ஆவது:-

சூத்திரத்திலுள்ள பதங்களைக் கொண்டு சூத்திரங்களை யொத்த வாக்கியங் களால், சூத்திரத்திலுள்ள பொருள்களையும், பதங்களையும் விரித்தெழுதுதல் பாடியம் எனப்படும்.

இந் நூலாசிரியர் உரையாசிரியர் இருவர் பெருமைகளையும் பின்னர் உள்ள அவர்தம் வரலாற்றில் அறிந்துகொள்ளலாம்.

## அரும்பத விவேகம்

'அரும்பத விவேகம்' என்பது இம் மாபாடியத்தைக் குறிக்கின்றது. இந்நூலின் தொடக்கத்தில் உள்ள.

"மலைமகள் கொழுநன் மைந்தர்நம் குரவர்
கலைமகள் சேவடி கருதும் பரமன
வருந்தமிழ் ஞான வரண விளக்கத்து
அரும்பத விவேகம் ஆம்உரை செயற்கே"

என்று நுதலிப் புகுதலை யுணர்த்தும் பாட்டால் அதனை அறியலாம். அரும் பதம்- அரியசொல். அரும்பதப்பொருள் - அரிய சொற்களின் பொருள். இஃது 'அரும்பத விவேகம்' ஆதலின், குறிப்புரை அன்று. பாடியம் என்பதன் பொருளே அது. இம் மாபாடியத்தை நன்கு நோக்கின், 'அரும்பதவிவேகம்' என்றதன் பொருத்தம் இனிது புலப்படும். படவே இத்திறத்திலும் உரையாசிரியரது செயலும் சொல்லும் கருத்தும் ஒத்திருத்தல் விளங்கிற்று.

## பேருரைச் சிறப்பு

இதன் ஆசிரியர் வெள்ளியம்பலவாணர். தென்பாற் குமரிமுதல் வடபால் இமயம்வரை சென்று கண்டவர். திருநெல்வேலி, காசி முதலிய பல இடங்களில் வாழ்ந்தவர். காசியில் வாழ்ந்த காலங்களில், வடமொழியில் உள்ள எண்ணற்ற சித்தாந்த நூல்களைக் கற்றுணர்ந்தவர். இருமொழியிலும் அளவில் அடங்காத சித்தாந்த சாத்திரங்களை யுணர்ந்த பெருமை இவர்காலத்தில் இந்நாட்டில் இம் முனிவர் பிரானுக்கே உரியதாகும். ஆகவே இப் பேருரை மணிமிடை பவளம் போல வடமொழிமிடை தமிழ்வடிவில் விளங்குகிறது. இதில் உள்ள மேற்கோள் நூல்களின் பெயர்களெல்லாம் இந்நாட்டினர்க்குப் புதியனவாயுள்ளன. இம்முனிவரது சாத்திர ஞானக்கடலின் பேராழத்தைக் காட்டுவனவாகப் பல உள்ளன. அவற்றுள் ஒன்றுன முத்திநிச்சயப் பேருரை முன்னரே வெளியாகி, உலகம்போற்றும் பெருமைக்குரியதாய் உலவுகின்றது. வெள்ளியம்பலவாணர் சிவஞானனந்த சொரூபர். அவர் செய்த பேருரை அச் சொரூபத்தின் தடத்த ரூபம் ஆகும். ஆகவே இஞ் ஞானவரண விளக்கமாபாடியம் ஆகிய தடத்த ரூபத்தை உணர்ந்தவர், சிவ சொரூபம் எளிதின் எய்துவர் என்பது திண்ணம்.

## மாபாடியப் பதிப்பு

நெடுங்காலமாகச் சைவப் பெருமக்களால் மிக்க ஆர்வத்தோடும் எதிர் பார்த்து நிற்கின்ற சிவஞானக் களஞ்சியமான இம் மாபாடியத்தை வெளியிடத் திருவுளங் கொண்டவர்கள் தருமையாதீனத்தின் 23ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் ஆவார்கள். அவர்கள் அருளாணையால் ஆக்கிய கையெழுத்துப் பிரதியில் இடையிடையே சிற்சில பகுதிகள் கிடைக்காமல் விடப்பட்டுள்ளன,

உள்ள அளவேனும் உலகர்க்குப் பயன் நல்கற் பொருட்டு 'ஞானசம்பந்தம்' என்னும் தருமபுர ஆதீனத் திங்கள் வெளியீட்டிலே சிற்சில பக்கம் வெளியிடப் பட்டுவந்தது. பின் தனி நூலாகவே வெளியிடத் திருவுளங்கொண்ட 25-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அடியேனையும் தருமை யாதீனப் பல்கலைக் கல்லூரி வடமொழிப் பேராசிரியராகிய சிரோமணி, ஸ்ரீ கே. இராசகோபால சாஸ்திரி அவர்களையும் செவ்விதின் ஆராய்ந்து வெளியிடும் வண்ணம் பணித்தருளினார்கள். அக்கட்டளையைப் போற்றிப்புனைந்து ஒல்லும் வகையில் ஆராய்ந்து வருகின்றோம். நூலும் அச்சிடப்பெற்று வருகின்றது. இப்பொழுது நிகழ்ந்த அளவினும் இன்னும் அச்சாகத்தக்கபகுதி மிகுதியாயுளது எனினும், பரபக்கமும், ஞானாந்த சங்கிரகமும், அளவியலும் ஆகிய மூன்றையும் ஒரு பகுதியாக்கி வெளியிடுவது சைவருலகம் எளிதிற் கையாள்வதற்கும். இதனைப்பற்றிய எண்ணங்களை வெளியிடுவதற்கும் ஏற்றதாகும் என்று திருவுளத்தெண்ணிய எங்கள் குரு முதல்வர் அருளாணையின் வண்ணம் இவ்வளவில் இது வெளியிடலாயிற்று. இதனினும் திருந்திய முறையில் இது வரற்பாலதாயினும், முதல் முயற்சியில் இத்துணைச் சிறப்பில் வெளிவரும் பெருநலத்தைக் கருதி உலகம் ஏற்றுப் பயன் எய்தும் என்று எண்ணுகின்றேன். இத்தகைய ஞானபுத்தகதானம் ஆகத் தமது அருட் கொடையைச் செய்துவரும் குருமணியை நீடுழி வாழ்க! வாழ்க! வாழ்க!!! என்று வாழ்த்துவதே நமக்கு உற்ற கடமையும் கைம்மாறும் ஆகும். வாழ்க குருமரபு! வளர்க சிவஞானம்!

தருமபுரம்
29—8—57

அடியார்க்கு அடியன்.
முத்து. சு. மாணிக்கவாசகன்,
பிரின்சிபால், ஆதீனப் பல்கலைக்கல்லூரி.

குருபாதம்

தருமை ஆதீன குருமுதல்வர்

# ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

பாண்டியநாடு, சீவில்லிபுத்தூர், கார்காத்தார் (சைவவேளாளர்) மரபு. தந்தையார் சுப்பிரமணியப் பிள்ளை. தாயார் மீனாட்சி அம்மையார். திங்கட் கிழமையில் தோற்றம். பிள்ளைத் திருப்பெயர் 'ஞானசம்பந்தன்'. கல்வியில் இளம்பூரணர். பெற்றோர் தம் ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீ சோக்கலிங்கத்தை வழிபட மதுரைத் திருவாலவாய்க்குப் பிள்ளையோடு போந்தனர். திரும்பும் நாளில், 'அம்மையப்பர் ஆலவாயானும் அங்கயற்கண்ணியுமே. உடம்பிற்குத் தாய் தந்தையான உம்மோடு வாரேன்' என்று மறுத்து, அவரை உளங்கோளச் சோல்லி விடுத்தார் மெய்யுணர் பிள்ளையார்.

நாள்தோறும் போற்றாமரை முழுக்கு. வேளைதோறும் திருக்கோயில் வழிபாடு. ஒருநாள் அக்குளக் கரையில் அடியவர் புரியும் சிவபூஜையில் அழுந்திற்று அவர் உள்ளம்.

"தாவரிய அன்பினால் சம்புவினை எவ்விடத்தும்
யாவர்களும் அர்ச்சிக்கும் படிகண்டால் இனிதுவந்து
பாவனையால் நோக்கினால் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய அன்பினால் மேலவர்க்கும் மேலானார்."

(சேக்கிழார் சுவாமிகள்)

இது போய்யாமோழி. ஞானசம்பந்தர் சோக்கலிங்கத்தை வேண்டினார். இரவில் கனவில் அருளியவாறே, போற்றாமரையின் வடகீழ் மூலையில், பேட்டகத்தோடும் அட்டமூர்த்தியைப் பெற்று, நட்டம் ஆடினார். இட்டமாப் பூசிக்க எண்ணுவரோ? சிவாகம விதிப்படி வழிபட விரும்பினார். அது குறித்து ஆண்டவனை வேண்டினார். கால்மாறினான் அதற்குப் பால்மாறுவனோ? திருவாரூரில் ஞானப்பிரகாச முனிவரிடம் உபதேசமும் பூஜையும் ஏற்கப் பணித்தருளினான். இருவர் கனவிலும் அதற்கேற்ற அருள் நிகழ்ந்தது.

திருவாரூரில் சித்தீச்சரத்தில் தேன்முகக்கடவுள் திருமுன், பக்குவ சீடரை அருட்குரு எதிர்நோக்கியிருந்தார். அங்குச் சேர்ந்த பிள்ளையார் காந்தம்

கண்ட இரும்பே போல விரைந்துற்றார். அபயம் பெற்றார். சிவதீக்ஷையும் சிவ பூஜையும் எய்தினார். நாள்தோறும் சோக்கலிங்கத்தைப் பூஜித்துப் பாடியதே சோக்கநாத வெண்பா. குரு தோத்திரமே ஞானப்ரகாச மாலை. அநுபவத்திற் கண்டதே 'சிவபோகசாரம்'.

ஒருநாள் பூங்கோயிலில் வழிபாடு; மடத்து வெளியே குருநாதர் 'நிற்க' என்று பணித்தருளினார். குருவாணை கடவாதவர் ஆதலின் கைவிளக்கோடு நின்றார். அசைந்தா ரல்லர். மழையோ அவரைச் சுற்றி மூன்றடிக்கு அப்பாலேயே பெய்தது. குருபத்தினியார்க்கு விடியலில் அவ்வுண்மை தெரிந்தது. குருவும் அதுகேட்டுச் சென்று நோக்கி, உள்ளுருகி, விழிநீர் பெருகி, அணுகித் தழுவி, 'யாம் வணங்கும் கடவுள்' வேறுண்டோ என்று மொழிந்து, அதிதீவிர பக்குவியான உமக்கு இனி இங்கு யாது உண்டு? நினைத்த இடத்தில் சென்று, உபதேசம் புரிந்து, சமய பரிபாலனம் செய்க என்றார். உவப்பத் தலைக்கூடியவர், உள்ளப் பிரியும் நிலையினரே ஆயினும்,

"கனக்கும் போதிக்கும் எருதுக்கும் தன்இச்சை கண்டதுண்டோ
எனக்கும் உடற்கும் எனதிச்சையோ? இணங்கார் புரத்தைச்
சினக்கும் கமலையுள் ஞானப்ர காச சிதம்பரஇன்று
உனக்கு இச்சை எப்படி? அப்படி ஆக உரைத்தருளே."

என்று வேண்டினார். தருமபுரத்திற்குச் செல்க எனப் பணித்தருளினார் கமலை முனிவர்.

குருவாணைப்படி தருமபுரத்தை அடைந்தார். சைவ சமய பரிபாலனம் புரிந்து வந்தார். ஞான நூல்கள் பல அருளினார். அவற்றுள் சிவபோகசாரம், முத்தி நிச்சயம், ஞானாவரண விளக்கம் முதலியன உலகம் புகழும் உத்தம நூல்கள். ஆநந்தபரவசர் முதலிய பலரை இச் சிவ ஞான வுபதேச பரம்பரையில் நிலவச் செய்தருளினார் இக் குருமுதல்வர். வாழ்க குருஞானசம்பந்தர் மலரடிகள்.

குருபாதம்

# ஸ்ரீமத். வெள்ளியம்பலவாண சுவாமிகள்

இவர்கள் நான்காவது குருமூர்த்திகளாகிய ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமிகளிடத்தில் சிவதீக்கையும் சைவ சந்நியாசமும் பெற்றவர்கள். படிக்காசு வைத்த முனிவருடன் காசியாத்திரை சென்று ஆங்கு ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளிடம் வடமொழி தென்மொழி இரண்டையும் கற்று வல்லவரானார்கள். ஐந்தாவது குருமூர்த்திகளாகிய ஞானசம்பந்த தேசிக சுவாமிகளிடத்தில் ஞான தீக்கை பெற்று அவர்கள் திருமுன் ஞானசாத்திரங்களையும், பண்டாரசாத்திரங் நன்கு கற்றுத் தெளிந்தவர்கள்.

இவர்கள் புள்ளிருக்குவேளூர் முதலான இடங்களில் சிவாலயத் திருப்பணி புரிந்து, திருவெண்காட்டில் நடராஜப்பெருமானுக்குத் திருச்சபையும் அமைத்துள்ளார்கள். இம்முனிவர் பெருமான் தக்ஷிணயாத்திரை செய்யும்பொழுது, திருச்செந்தூரிலே முருகக் கடவுளைத் தரிசித்து, ஆங்குள்ள அடியார்கள் வேண்டுகோளின்படி சண்முக விலாசத்திற் பிரசங்கஞ்செய்துகொண்டிருந்தனர். அத்தருணத்திலே வித்தியாகருவங் கொண்டிருந்த புலவர் ஒருவர், சுவாமிகளின் கல்விப் பெருக்கைக் கண்டு பொறாமையுற்று வீண்வாதஞ்செய்து தூற்றலானார். அப்பொழுது முனிவர், அப்புலவரை நோக்கி, நாம் உன்னிடத்தில் நேரில் நின்று வாதஞ்செய்வதற்கு நீ அருகனல்லை. ஆதலால், எமது மாணாக்கனால் வெற்றி கொள்வேம் எனக்கூறிப் பிரசங்கத்தைச் சிறப்பாகச் செய்துமுடித்தார்கள். பின் திருநெல்வேலியினை யடைந்து, பொருநைநதி தீரத்திலுள்ள சிந்துபூந்துறையில் தம் ஆதீனத்துக்குச் சொந்தமான மடாலயத்தில் எழுந்தருளியிருந்தார்கள். மாணாக்கர் பலர்க்கும் இலக்கண இலக்கியங்களைப் போதித்துவந்தார்கள்.

அக்காலத்திலே, துறைமங்கலம் சிவப்பிரகாச முனிவர், பேரிலக்கணங்களைக் கற்க விரும்பித் தம் சகோதரர்களாகிய வேலையர் கருணைப்பிரகாசர் என்னும் இருவரோடும் தக்ஷிணத்தை நாடிச்செல்லும்பொழுது, வடமொழியிலும் தென்மொழியிலும் மிக வல்லவராகிய வெள்ளியம்பலவாண முனிவரர் சிந்து பூந்துறையில் இருக்கின்றார்களெனக் கேள்வியுற்று, ஆங்கடைந்து முனிவரரைத் தரிசித்து வணங்கித் தமது கருத்தைத் தெரிவித்துக்கொண்டனர். முனிவரர், சிவப்பிரகாசருடைய இலக்கியப் பயிற்சியை அறிதற்பொருட்டு, 'கு' எனத் தொடங்கி 'ஊருடையான்' என்பதை இடையிற்பெய்து 'கு' என்றதே ஈற்றிலும் முடியும்படி ஒரு வெண்பாப் பாடுகவென்று கூறச் சிவப்பிரகாசர்,

"குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழன்
முடக்கோடு முன்னமணி வார்க்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ளல்
ஊருடையா னென்னு முலக்கு"

என்னும் வெண்பாவை இயற்றினார். இவ்வெண்பாவில் வடக்கோடு தேருடையான் என்று அமைத்தமையை முனிவர் வியந்து பாராட்டி, அவருக்கும் அவர் சகோதரர் களுக்கும் ஐந்திலக்கணங்களையுங் கற்பித்தருளினார். சிவப்பிரகாசர், துறை மங்கலம் அண்ணாமலை ரெட்டியார் தமக்கு வழிச்செலவிற்காக உபகரித்த முந்நூறு பொன்னையும் குருதக்ஷிணையாக வைத்துவணங்க, முனிவரர் "இப் பொருள் நமக்கு வேண்டுவதில்லை; திருச்செந்தூரிலே நம்மிடம் வீண்வாதஞ்செய்து நம்மைத் தூற்றும் புலவனை நீ வெற்றிகொண்டு, அவன் வந்து நம்மை வணங்கும் வண்ணம் செய்தலே குருதக்ஷிணையாகும்" என்று மறுத்தருளினார்.

உடனே, சிவப்பிரகாசர் ஆசிரியரை வணங்கி அனுமதி பெற்றுக்கொண்டு, ஆங்குள்ள மாணாக்கர் சிலருடன் திருச்செந்தூரிற் சென்று முருகக் கடவுளைத் தரிசித்து வணங்கிப் பிரதக்ஷிணம் வரும்பொழுது முனிவராற் சுட்டப்பட்ட தமிழ்ப்புலவர் எதிர்ப்பட்டார். அவரை நிரோட்டக யமக வந்தாதி பாடி வென்று கொணர்ந்து சிந்துபூந்துறையிலுள்ள தம் போதகாசிரியராகிய முனிவருக்கு அடிமையாக்கி வணங்கினார். முனிவரர் திருவுள மிகமகிழ்ந்து, சிவப்பிரகாசரை நோக்கி, நீ முதலில் இயற்றிய செய்யுளில் வியந்து கூறிய சிதம்பரத்தில் சிலநாள் வாசஞ்செய்கவென விடைகொடுத்தனுப்பினார்.

முனிவரர் தம் ஆதீனத்துப் பிரதமாசாரியராகிய ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர் திருவாய்மலர்ந்தருளிய முத்திநிச்சயம் என்னும் சிவஞான சாத்திரத்திற்கு ஒரு பேருரையும், மெய்கண்டசாத்திரம் பதினான்கினுள் ஒன்றாகிய சிவஞானசித்தியார்க் குரிய ஞானாவரணவிளக்கம் என்னும் செய்யுள் வடிவாகிய அருள் நூலுக்கு அரும்பத விவேகம் என்னும் ஒரு பேருரையும், மிருகேந்திர ஆகம மொழி பெயர்ப்பும், ஞானசம்பந்த தேசிகர்மீது சமுகமாலை, தாலாட்டு, திருப்பள்ளி யெழுச்சி என்னும் தோத்திர நூல்களும் பிறவும் இயற்றியருளினார்கள்.

இங்ஙனங் கூறிப்போந்த வெள்ளியம்பலவாண முனிவரர் சிவபத்தி மிகுதி யால் சிவதல யாத்திரை செய்யும்பொழுது, ஆங்காங்குள்ள அடியார்கள் வேண்டுகோளின்படி பல புராணப் பொருள்களையும் பிரசங்கஞ் செய்துவந்தார்கள். முனிவரர் இவ்வாறு சிவதலங்கள்தோறுஞ் சென்று யாத்திரை செய்து முடிந்த பின், விராட்புருடனுக்கு இருதய ஸ்தானமாகிய சிதம்பரஞ் சார்ந்து, நெடுநாள் ஞானநிட்டை கூடியிருந்து, ஸ்ரீ நடராஜப் பெருமானுடைய குஞ்சிதபாதத்தின் நீழலில் கலந்தருளினார்கள். அங்கு இவர்கள் சமாதி ஞானப்பிரகாசர் குளத்துத் தென்மேற்கு மூலையில் இலங்குகிறது. கந்தபுராணச் சுருக்க ஆசிரியராகிய சம்பந்தசரணாலயசுவாமிகள் இவர்களுடைய மாணாக்கர்களுள் ஒருவராவார்கள். வாழ்க வெள்ளியம்பலவாணர் மலரடிகள்.

சிவமயம்

# ஞானாவரண விளக்கத்து அரும்பத விவேகத்திலுள்ள

# விஷய அட்டவணை



தருமபுர ஆதீனம் 25-ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரை

தருமபுர ஆதீனத்தின் ஆதிகுருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

அருளிய

# ஞானவரண விளக்கமும்

## வெள்ளியம்பலவாணர் மாபாடியமும்

காப்பு

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த னால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான் றருமொருவா ரணத்தின் றாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்றிருமால் செல்வமுமொன் றோவெனச் செய்யுந் தேவே.

ஆரண முதலா வனைத்துமைந் தொழிற்குங்
காரண மெனுமொரு கடவுளை •
வாரண முகனை வணங்குது மகிழ்ந்தே.

மலைமகள் கொழுநன் மைந்தர்நங் குரவர்
கலைமகள் சேவடி கருதுதுந்
தலைமைசா லறிவு தலைப்படல் குறித்தே.

## மாபாடியம்

அகத்தில் அகப்புறச் சமயம்.

ஆலம்வித் தென்ன வைச்ச தச்சிவ ஞான போத
மூலமா யதிலெ ழுந்த முளைச்சிவ ஞான சித்தி
மேலவாந் தளிரு மற்றும் விரிந்தனா ளுந்த தீபஞ்
சாலவும் பலமு யிர்க்குத் தருமரும் பதவிவேகம்.

மலைமகள் கொழுநன் மைந்தர் நங்குரவர்
கலைமகள் சேவடி கருதுதும் பரமென
வருந்தமிழ் ஞானுவரண விளக்கத்
தரும்பத விவேக மாமுரை செயற்கே.

1 * * *

ஆசிரியர் "அகச்சமயம்" என்றது, "ஞானுவரண விளக்கம்" என்னும் இந்நூலின் முன்னர்ப் புறப்புறச்சமயப் புறச்சமய சங்கற்ப நிராகரணங் கூறி இனி அகச்சமய சங்கற்ப நிராகரணம் கூறத்தொடங்கி முதற்கண் அது கூறும் இயல்புணர்த்துகின்றது.

பதப்பொருள் வெளி. ஈண்டு ஆசிரியர் என்றது அருணந்திதேவர் என்னும் அடிகளை, இனிச் "சிறிது சொல்வாம்" என்றது ஒரோவழி ஆகமமும் மற்றுஞ் சிறிது கண்டதுபற்றி.

2 * * *

"பொய்மையர்" என்பது அகச்சமயம் இருவகைப்படும் என்பதும், அவை கொண்ட வளவும், பொருளும் ஒத்தியலுமென்பதுங் கூறுகின்றது. ஈண்டுப் பர அபர சர்வாங்க பிரதிபாதகமான ஞானுவரண சித்தாந்தத்திற்குச் சைவாதி அகச் சமயங்கள் பெரும்பான்மையும் ஒத்தியலுமெனவே புறச்சமய மவ்வாறொத்தியலா வென்வருதலின் அகச்சமயம் சூட்சுமார்த்த பிரதிபாதகம் எனவும், புறச்சமயம் ஸ்தூலார்த்த பிரதிபாதகம் எனவும் பெறப்பட்டது. அது யோகஜத்தில்,

स्थूलं च सूक्ष्मकं चैव समयं द्विविधं भवेत् ।
स्थूलं बाह्यमिति प्रोक्तं सूक्ष्ममाभ्यन्तरं स्मृतम् ॥

என வருமாற்றுன் உணர்க. அவற்றின்பேதம் சங்கிரகமாக ஸ்ரீமத் அசிதாகமத்தில்,

लोकायतोऽथ बौद्धश्चार्हतो मीमांस एव च ।
मायावादः पाञ्चरात्रं षडेते समया बहिः ॥

எனவும்,

शैवं पाशुपतं वामं भैरवं तु महाव्रतम् ।
कालामुखमिति ख्यातमन्तः समयषट्ककम् ॥

எனவும் வருமாற்றுன் உணர்க. ஈண்டுச் சைவம் என்றது சுத்த சைவம் என்னும் சௌமிய சைவத்தை; பாசுபதாதிகள் அசுத்த சைவம் என்னும் ரௌத்திர மாகலின். அது ஸ்ரீமத் சுப்பிரபேதத்தில்,

तदेव सौम्यमाख्यातं, तन्त्रं पाशुपतादिकम् ।

என வருமாற்றுன் உணர்க. ஈண்டுக் காமிகாதி மூலமான சௌமிய சைவத்தைச் சித்தாந்தமென்றலின், பூர்வபக்கமாக எண்ணப்படும் அறுவகைச் சமயத்து ளொன்றுமோ எனின், வேதத்திற்குப் பூர்வமீமாஞ்சை உத்தரமீமாஞ்சை இருப்பன போலச் சௌமியசைவத்துக்கும் பூர்வபாகமான கர்மாந்தசைவம் என்பது பூர்வ பக்ஷமாயும் சௌமிய சைவாந்தமான "ஞானந்தம்" என்றது சித்தாந்தமாயும் கூறுதலின் அவ்வாறு ஆம் என்க.

அன்றி, காளாமுக பேதமான காபாலத்தைப் பிரித்தோதி ரௌத்திரசைவம் அறுவகைத்தாக்கிச் சௌமியசைவமான காமிகாதிகள் சித்தாந்தமெனக் கூறினுமாம். அசிந்திய விசுவசாதாக்கியத்தில்,

वामं तु त्रिविधं प्रोक्तमनादिः पूर्वपश्चिमम् ।
चतुर्विधं दक्षिणं स्यान्महाव्रतमतः परम् ॥
कालामुखं च कापालं तद्वत्पाशुपतं भवेत् ।
शैवं चतुर्विधं प्रोक्तं सिद्धान्तं द्विविधं भवेत् ॥

எனவும், சுப்பிரபேதத்தில்,

शैवं पाशुपतं सोमं लाकुलं तु चतुर्विधम् ।
तेषु शैवं परं सौम्यं रौद्रं पाशुपतादिकम् ॥

எனவும் பிறிதோராற்றுற் கூறிய வழியும் சௌமியம் பரம சித்தாந்தமென வந்த வாறு காண்க. பிறவும் விரித்துக்கொள்க.

3 * * *

"அகப்புறந்தா னிருவிதமாம்" என்பது அகப்புறம் படும் பாகுபாடு கூறு முகத்தான் மேற் காணுபத்திய கௌமார மதங் கூறுதற்குத் தோற்றுவாய் செய்கின்றது. ஈண்டு, 'அகப்புறந்தா னிருவிதமாம் வாமஞ்சாம் பவமு மங்கியலுந் தக்கிணமு மதுபோ லாகும்' என்புழித் தக்கிணமென்றது வேருரும்த்மேயன்றி,

वामं हि शाम्भवं शास्त्रं भैरवं दक्षिणात्मकम् ।
मिश्रं यामलमित्युक्तं सप्तमातृप्रधानकम् ॥

எனவும்,

वामं च दक्षिणं चैव तद् द्वयोर्मिश्रकम् तथा ।

எனவும் வரும் வைரவ தந்திரமான தக்ஷிணத்தைக் கூறியதன்று. பின்னும் தக்ஷிணம் என்றது யாதோஎனின் ஈண்டு மிசிரத்தை வாம வைரவத்துள் அடக்கிச் சுத்த சைவத்தைத் தக்ஷிணமென்றலின் மாறுபாடன்று. அது மேல் விளங்கும்.

இனி வாமாதிகளை அகப்புறச்சமயமென்றதென்னையோவெனின் ? சௌமிய சைவாசார விரோதமான மத்ய மாமிசாதி சேவைகளாற் சுத்த சைவர்க்குட் கோள்ளவாராமையின். அது சுப்பிரபேதத்தில்,

वामं च दक्षिणं चैव तद् द्वयोर्मिश्रकं तथा ।
शैवा बाह्यार्थमाख्याताः शैवा अपि न पूजिताः ॥

எனவருமாற்றானுணர்க. இனி "வாமமொன்றிபல" என்றது,

वामं तु त्रिविधं प्रोक्तमनादिः पूर्वपश्चिमम् ।

என சிந்தியவிசுவ சாதாக்கியாதிகளிற் பலபடக் கூறுதலின், ஈண்டு, 'ஒருவகை யானென்ப' தென்றது வாமிமதமுதற் சித்தாந்த வாமி மத மீருனவற்றை என்க. அவை மேல் விளங்கும்.

4 * * *

இனி, உலகர் என்பது, காணபத்தியமதமு மறுப்புங் கூறுகின்றது. ஈண்டுலகரிடையூறு தவிர்ப்பது,

वागीशाद्याः सुमनसः सर्वार्थानामुपक्रमे ।
यं नत्वा कृतकृत्याः स्युः तं नमामि गजाननम् ॥

என்றற் றொடக்கத்தால் உணர்க. "ஒறுத்திருவர்மனைவியரைக்கவர்தல்" என்றது அரியயன் றேவிமாரைக் கவர்ந்து தம்மிருபக்கத்தும் வைத்துக்கோடல். "பல பொருளினொடு மாலை யெறிதல்" என்றது ஒரு காலத்துக் கடலையும் அங்குள்ள

பொருள்களையும் துதிக்கையாற் கவர்ந்து மீளச் சிதறுமளவில் அரி தனக்குரிய தெனத்தேடி யெடுத்துச் சக்கரங் காணது அதுபெற விநாயகர்முன் கூத்தாடிப் பெற்றது. "மற்றும் பரியதேர் அச்சோடிதல்" என்றது சிவன் முப்புரமழிக்கத் தொடங்கும்போதிவர்க்குப் பிரீதி பண்ணுமையிற் றேரின் அச்சொடியச் செய்தல்.

தச்சு விடுத்தலுந் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென றுந்தீபற
அழிந்தன முப்புர முந்தீபற. —திருவாச, உந்தி

என்றது மிதுபற்றி. பின்னர்ச் சிவன் நினைத்து,

ओङ्कारममृतं ब्रह्म शिवमक्षरमव्ययम् ।
यमामनन्ति वेदेषु तं प्रपद्ये विनायकम् ॥

என்பது முதலிய ஸ்தவராஜத்தாற் பூசித்த பின்னர் அரி விடையாகத் தாங்கலுந் தேரியல்பினின்று புரமெரித்ததெனச் சிவபுராணம் கூறுமாற்றானுணர்க. "தலைவ னிவனென மூலத் துறைதல்" ஆவது,

मूलाधारे चतुष्पत्रपद्ममध्ये विनायकम् ।
गजवक्त्रं च रक्ताभं त्रिनेत्रं च महोदरम् ॥

என்றித் தொடக்கத்தன ஆகமங் கூறுதலின் அது சத்தியபிவியத்தித்தான மாகலினுண்டே சிவாபிவியத்தித் தானமுமாதல்பற்றி...............னுகிய தலைவ னிவனென்பது கருத்து. "தகுதி பிறவற்று" மென்றது காணபத்திய தந்திரம் கூறும்பலவற்றானுமென்பதற்கு.

* * *

5

"தானவரைக் கொன்று" என்றது கௌமார மதமு மறுப்பும் கூறுகின்றது. ஈண்டு, தானவரைக் கொன்றதும் மற்றும் கந்தபுராணத்தும் பிறவற்றுங் காண்க. சதுர்முகனைச் சிறை வைத்தது பிரணவத்தின் பொருள் தெரியாமையின். அது வருமாறு:- காஞ்சீமான்மியத்தில் குமரகோட்டம் பற்றிய இயைபில் சுப்பிரமணியரைக் குறித்துப் பிரமன் கூறியது.

हृदयकमलमध्ये दीपवद्वेदसारं प्रणवमयमतर्क्यं योगिभिर्ध्यानगम्यम् ।
हरिगुरुशिवयोगं सर्वभूतस्थमेकं सकृदपि मनसा मां ध्यायते यः स मुक्तः ॥

एतावदद्य विज्ञातमात्रस्यार्थोऽक्षरस्य च ।
मां विमोचय देवेश सुब्रह्मण्य नमोऽस्तु ते ॥

என்பது. பிறகு சிவன் கூற்று,

प्रणवस्य महार्थस्य मत्परस्य मनोरसौ ।
मत्पुत्रवाचकस्यैष श्रुतिदृष्टस्य सर्वशः ॥
ईशानः सर्वविद्यानां भूतानामहमीश्वरः ।
ब्रह्माधिपो ब्रह्मणश्च ब्रह्म सोऽहं सदाशिवोम् ॥
अथवा सर्वयज्ञेषु सुब्रह्मण्योमिति क्रिया ।
अहं च मम पुत्रश्चाप्योङ्कारार्थौ श्रुतौ श्रुतेः ॥
इममर्थं न जानाति कथमेष विधिः स्मृतः ।
विमोच्यश्च कथं त्वेष तन्मया वद कामराट् ॥
तथाप्यहं विधातारं मोचयिष्ये कृपाबलात् ।
प्राहिणोदथ नन्दीशं सुब्रह्मण्यान्तिकं शिवः ॥

என்பது. இவை முதலியவற்றாலும் முன்னர்ப் பிரமமத மறுப்பிற்காட்டிய வசனங் களானு முணர்க. *"பன்றியேனத் திருமாலான பொழுதடாதது" என்றது முன்னர் வைணவமத மறுப்பில் வீரபத்திரர் நாரசிங்கத்திற் குரைத்தது.

विवृतस्कन्धदंशेन दंष्ट्रोत्पाटनपीडितम् ।
वराहविग्रहस्तेऽद्य साक्रोशस्तारकारिणा ॥

என வருமாற்றானுணர்க.

"எங்கும் நொடியிற் சுற்றி" என்றது சிவன் கையிலுள்ள பழத்தை விநாயகரும் முருகவேளும் கேட்டவளவில் பிரமாண்டகடாஹத்தை நொடியிற் சுற்றி வந்தவனுக்குக் கொடுப்போம் என்றுழி அவ்வாறு சுற்றிவந்த வதிசயந் தோன்ற. இதன் விரிவு சிவபுராணத்திற் கண்டுகொள்க. "அம்பிகையைப் பயமாறப் போரிற் காத்தல் தேவி தண்டி முண்டி என்னுமிருவரையும் சங்கரிக்கப்

* பக்கம் 5 இல் 'வருமாறு' என்றதால், அவ்வருமாற்றை உணர்க என்றது.

போர்புரிகாலைச் சிறிது வருத்தந் தோன்றுழிச் சிந்தித்தவுடனே சென்று வருத் தந்தீர அவ்விருவரையுங் கொன்று தேவிக்குபகரித்தல், இதுவும் மூலபுராணம் கூறும். ஈண்டெழுதிற் பெருகும்.

"கானமருங் கொன்றை யணிவார்க்குபதேசித்தல்" என்றது முற்கூறிய வாறே பிரணவப் பொருளைச் சிவன் கேட்டவளவிற் சிவனுக்குரைத்தது. அதுவு முன்னர்ப்பிரமமத மறுப்பில் உதாகரித்த சிவரகசிய கண்டம் கூறுமாற்று னுணர்க. இதனானேயன்றே அருணகிரிநாதர்,

'முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் தருளிய' —திருப்புகழ்.

என்றதூஉம், மற்றனைத்து மறுப்பும் வெளி. மற்றனைத்தென்றது கௌமார தந்திரம் கூறுவனவும் கொள்ள; அதிகாரமுறையான் முற்கூறிய "பிறவற்று" மென்ற தீண்டும் இயையு மென்பதனால். இவ்வாறு அயனரியாருடைய விஷயத் திலுஞ் சிறந்த செய்கையுண்டாகலின் மற்றவற்றிற் கேட்கவேண்டாமையின், இவ்விருவருஞ் சேகத்கருத்தா ஆவரென பரமதவாதிகள் கூறுவர். அதை ஈண்டு வைத்து மறுத்தவாறு, இவ்விரு மதத்திற்கும் உத்தேசமின்றும் பிறவேனின் அது வருமாறு:- சுவச்சந்தத்தில்,

यन्न दृष्टं पशुज्ञानैः कुपथभ्रान्तदृष्टिभिः ।
यन्न सांख्यैर्न योगैर्वा न च वै पाञ्चरात्रिकैः ॥
स्वभाववादिभिश्चापि न च कर्मप्रवादिभिः ।
नापि संशयवादैश्च न च क्षपणवादिभिः ॥
न भूतवादिभिश्चैव नापि स्याल्लौकिकैरपि ।
न चात्मचिन्तकैर्वापि षट्पदार्थपरायणैः ॥
न चापि न्यायवादैश्च हेतुदृष्टान्तवादिभिः ।
नाप्येकजन्मवादैर्वा नानाप्येकत्ववादिभिः ॥
न धौर्तवादैर्लौकैर्वा न परिज्ञातमक्षरम् ।
इत्येवं वादिनां तेषां भेदानां तु शतत्रयम् ॥
त्रिषष्टिरधिकाश्चान्यवादिनां भ्रान्तचेतसाम् ।
अज्ञानतिमिरान्धानामुन्मीलनकृदुत्तमम् ॥

संसारपङ्कमग्नानां तमोनुदमिदं परम् ।
परमेशमुखोद्गीर्णं यन्मया प्रोक्तमद्भुतम् ॥

எனக் கூறியவற்றுள் இவ்விரண்டும் உளவெனக்கொள்க.

6 * * *

"நன்றுணர்ந்து முத்திபெற" என்றது முன்னிறுத்த முறையானே அகச்சமயத்துக்குப் புறச்சமயமானவற்றுள் வாமபேதம் கூறத்தொடங்கி முதற்கண் வாம மதத்தின் பொதுவியல் கூறுகின்றது. ஈண்டு வாம மென்றது சாம்பவத்தை. அது,

वामं हि शाम्भवं शास्त्रं दक्षिणं भैरवात्मकम् ।
मिश्रं यामलमित्युक्तं सप्तमातृप्रधानकम् ॥

என்பதனாலறிக.

शैवं पाशुपतं वामं भैरवं तु महाव्रतम् ।
कालामुखमिति ख्यातमन्तः समयषट्ककम् ॥

என அசிதாகமம் கூறும் ஆறனுள் யாமளம் கூறிற்றில்லையாலோவெனின், மிச்சிரம் என்பது வாமபைரவத்துள் அடங்குதலின் வேறு கூற வேண்டா என்க. இனி நவயாமள மாமாறு, ஞானசித்தியில்

नवशक्तिविधिप्रोक्तं नवमूलं तु यामलम् ।
तच्छाक्तं शाम्भवं शैवं तत्त्वं सिद्धिशाम्भवम् ॥
मूलागमं तु सन्मार्गं सहमार्गं शिवागमम् ।
सन्मार्गं सहमार्गं च मूलदिव्यागमोदितम् ॥
नवागमरहस्यार्थोद्भवोऽष्टाविंशतोदयः ।
शक्त्युक्तं यामलोद्भेदं नवभेदमनेकधा ॥

என்னும் வசனத்தால் உணர்க. நவாகமமாவன,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | पारतन्त्रागमम् | 2. | परमागमम् | 3. | शिवागमम् |
| 4. | शक्त्यागमम् | 5. | कलागमम् | 6. | देवप्रसादम् |
| 7. | पारतन्त्रावतारम् | 8. | शिवाज्ञासारम् | 9. | शिवसादाख्यप्रसादम् । |

எனவரும். பிறவும் உளவேற் காண்க. இவை கூறும் சித்தாந்தமும் ஒன்பது வகையாம். அவை:-

नवधा चेति संप्रोक्तो नवतन्त्रैकगोचरः ।
वामश्च मन्त्रवादश्च यन्त्रवादस्ततःपरम् ॥
तथा चौषधवादश्च कर्मवादस्तथैव च ।
अद्वैतवामसिद्धान्तो द्वैतवाममतः पुनः ॥
मिश्रवाममतः पश्चाद्वामसिद्धान्त इत्यपि ।

என்னும் வசனங்களால் அறியப்படுவன. இவை அனைத்தும் சங்கிரகமாக மூவகைப்படும் எனவும் வரும்;

वामं तु त्रिविधं प्रोक्तमनादिः पूर्वपश्चिमम् ।

எனச் சிந்தியவிசுவசாதாக்கியம் கூறலின். இம்மூன்றும் வேறொருவாற்றால் வரும் பேதம் என்பாரும் உளர். பிறவும் அறிக. இனி உலோகாயதாதி புறச்சமயமாமாறு:

न्यायो वैशेषिकश्चैव बौद्धश्चैवार्हतस्तथा ।
लोकायतश्च साङ्ख्यश्च मीमांसो वैष्णवस्तथा ॥
न्यायाद्यष्टकभेदोऽयं बहिःस्थः समयार्थकः ।

இனி, பைரவ முதலாகிய அகச்சமயமாமாறு:

शैवं शिवाद्वयं चैव शिवसंमेलनं त्रिधा ।
पश्चात्पाशुपतं चैव कालामुखमहाव्रतम् ॥
वामभैरवयोर्भेदाः शैवस्याभ्यन्तराष्टकः ।

எனச் சித்தாந்தங் கூறுமாறே வாமத்தினும் கண்டு கொள்க. ஈண்டு வாமம் என்றது வாம சித்தாந்த மொழிந்த பூருவபக்ஷமாயுள்ள வாம பேதங்களை;

சௌமிய சைவத்தில் ஞானந்தமொழிந்த பூருவபக்ஷமாயுள்ள கர்மாந்த பேதங்களைப்போல. மற்றும் விரித்துக்கொள்க.

7 * * *

...........ல நவவிதத்...........னேன்பது வாமிமதமும் மறுப்புங் கூறுகின்றது ஈண்டு உலகிற்கெல்லாம் பதி சத்தியன்றிப் பிறரில்லை என்றதற்கு வசனம் சுவச்சந்தத்தில்,

ब्राह्मी च वैष्णवी शक्तिरधिकारवहा मता ।
यमधिष्ठाय चात्मानं तत्संज्ञां संप्रपद्यते ॥
तद्विकारं च कुरुते शक्तिर्या पारमेश्वरी ।
ब्रह्मविष्ण्विन्द्ररुद्राश्च विघ्नेशा ईश्वराः शिवाः ॥
लोकपालाष्टमूर्तीशा मूर्त्यधीपगणेश्वराः ।
लोकाधिपाश्च देवेशि तथैव भुवनाधिपा ः ॥
ग्रहादिरुद्रमातारो योगनक्षत्रराशयः ।
शक्तिसंज्ञास्तु ते सर्वे भवन्ति तदधिष्ठिताः ॥
तत्पराक्रमवीर्यास्तु स्वकीये तु पदे स्थिताः ।
शक्त्यधिष्ठितचैतन्याः साकाराः क्रिययोद्यताः ॥

என் வருமாற்றான் உணர்க. இவ்வாறு வரும் விரிவு வாம தந்திரத்திற் கண்டுகொள்க. "சிவனென்று சொல்லுவதும் சத்தியைத்தானே" என்பதற்கு வருமாறு:

जगच्छक्तिमयं व्याप्तं जगच्छक्तिमयं शिवम् ।
जगदुत्पद्यते शक्तेः शक्तिस्तु परमः शिवः ॥

என்பது. "வாலறிவின் வழிபடவே முத்தி வரும்" என்புழி முத்தி சித்திக்கும் உபலக்ஷணம் அது,

जन्तोरपश्चिमतनोः सति कर्मसाम्ये निःशेषपाशपटलच्छिदुरा निमेषात् ।
कल्याणि देशिककटाक्षसमाश्रयेण कारुण्यतो भवति शाम्भवदेवदीक्षा ॥

அம்பாஸ்துதி 11

ஈண்டுக் கூறிய சாம்பவதீக்கை சாத்த தந்திரத்தை யனுசரித்தது.

हर्तुं त्वमेव भवसि त्वदधीनमीशे संसारतापमखिलं दयया पशूनाम् ।
वैकर्तनी किरणसंहतिरेव शक्ता घर्मं निजं शमयितुं निजया हि वृष्ट्या ॥

—அம்பா. 24

என்னும் இதனால் பசு பாச பதிகளின் இலக்கணமும் சித்தாந்தம் போலவே தெளிவாம்.

भोगाय देवि भवतीं कृतिनः प्रणम्य भ्रूकिङ्करीकृतसरोजगृहासहस्राः ।
चिन्तामणिप्रचयकल्पितकेलिशैले कल्पद्रुमोपवन एव चिरं चरन्ति ॥

—அம்பா. 23

எனவும் பிறவும் வருமாற்றான் உணர்க. மற்றும் விரிவிற் கண்டு கொள்க. இதன் மறையில் "இறைமுத லதற்குத் தபனனெனக்கதிர்க்கு" என்றதற்கு வருமாறு:-

प्रभया तु विना यद्वद्भानुरेव न विद्यते ।
विना शक्त्या तया तद्वत्स शिवोऽयं न विद्यते ॥
अपि धर्मी शिवः प्रोक्तो धर्मः शक्तिरितीर्यते ।

இதனானேயன்றே,

शक्तिः शरीरमधिदैवतमन्तरात्मा ज्ञानं क्रिया करणमासनजालमिच्छा ।
ऐश्वर्यमायतनमावरणानि च त्वं किं तन्न तद्भवसि देवि शशाङ्कमौलेः ॥

—அம்பா. 25

எனச் சிவன் சுவாமி, சத்தி சுவம் எனக் கூறியவாறும் என்க. இனி, "விசுவ மெல்லாஞ் சத்தி வடிவாயிற் றென்றி நசித்தலால் கெடுமேன்பதன்றியுரனுடை யோர் நவினெறியும் கெடும்" என்றது, சிவஞானபோதத்தில்,

आद्यत्वं चेदसद्भावो दृश्यं चेज्जडिमा भवेत् ।

என்றதுபற்றி. ஆயின்,

व्योमेति विन्दुरिति नाद इतीन्दुरेखारूपेति वाग्भवतनूरिति मातृकेति ।
निष्यन्दमानसुखबोधसुधास्वरूपा विद्योतसे मनसि भाग्यवतां जनानाम् ॥

—அம்பா. 3

என்றாற்போல வருவதென்னையோ எனின் அஃது உபாசனாவிஷயம். அன்றி,

यामामनन्ति मुनयः प्रकृतिं पुराणीं विद्येति यां श्रुतिरहस्य गिरो गृणन्ति ।
तामर्धपल्लवितशङ्कररूपमुद्रां देवीमनन्यशरणः शरणं प्रपद्ये ॥

—அம்பா. 1

எனவும்,

विद्यां परां कतिचिदम्बरमम्ब केचिदानन्दमेव कतिचित्कतिचिच्च मायाम् ।
त्वां विश्वमाहुरपरे वयमामनामः साक्षादपारकरुणां गुरुमूर्तिमेव ॥

—அம்பா. 27

எனவும் வந்ததூஉம் அதிட்டிக்கும் தன்மையாலும் வியாபகத்தினாலும் முன் கூறியவாறே வழிபாட்டினாலும் சத்தியின் ஆற்றலே வெளிப்படுப்பதன் மேற்று: இதனானேயன்றே 'சிலர்' என்று விகற்பித்துக்கூறியது. பிறவும் விரித் துணர்க.

8 * * *

"பகருமா மந்திரங்கள்" என்பது மந்திரவாமி மதமும் மறுப்பும். பொருள் வெளி, இம்மதம் வருமாறு:- சர்வசித்தாந்த விவேகத்தில்,

अथातो मन्त्रवादश्च सङ्ग्रहेण निगद्यते ।
मन्त्रोपासनया मुक्तिः सह प्रागुक्तवर्त्मना ॥
नमःस्वाहा स्वधा वौषट् वषड्ढुं फड्विभेदतः ।
सप्तकोटि महामन्त्राः सर्वकृत्यविधायिनः ॥
साक्षाच्छक्तिस्वरूपास्ते नत्वन्ये च, तथा वचः ।
मननं सर्ववेदित्वं त्राणं संसार्यनुग्रहः ॥
मननत्राणसंयोगान्मन्त्र इत्यभिधीयते ।

இச்சுலோகத்தில் சத்தி என்னும் சொல் எஞ்சி நின்றது.

इत्यतोऽपि स्फुटं तस्मान्मन्त्रज्ञानपुरःसरम् ।
मन्त्रोपासनया मुक्तिर्मन्त्रवादे निरूपिता ॥

என்பது. இதன் மறை தானே விளங்கும்.

௯ * * *

"மந்திரமும் தந்திரமும்" என்பது இயந்திர வாமிமதமும் மறுப்பும் கூறுகின்றது. இதன் பொருள் வெளி, "மறுப்பினே..........................வழிவருதலினு" லென்றது மந்திரவாதியொருவன் கற்பித்த ரேகையாய் வருதலினுல் என்றவாறு இம்மதம் சருவசித்தாந்த விவேகத்தில்,

अथातो यन्त्रवादे तु वामतन्त्रोक्तवर्त्मना ।
तद्यन्त्रसेवया सर्वं सिध्यतीति विनिश्चयः ॥
सर्वत्रापि विना यन्त्रं मन्त्रभेदेन किं फलम् ।
तन्त्रभेदेन वा तस्मात्सर्वं यन्त्रेण सिद्ध्यति ॥
अणिमा महिमा चैव गरिमा लघिमा तथा ।
ईशत्वं च वशित्वं च प्राप्तिः प्रकाम्यमेव च ॥
ततोऽन्ये सिद्धिभेदाश्च कथ्यन्ते कर्षणं पुनः ।
मोहनं च तथा चोच्चाटनं स्तम्भनमेव च ॥
मारणं च तथा विद्वेषणं भेदनमित्यपि ।
लोकान्तरेषु भोगश्च मुक्तिश्चेति विनिश्चयात् ॥
साक्षाच्छक्तिस्वरूपं तद्यन्त्रमेवात्र सेव्यते ।
तदङ्गत्वेन मन्त्रादि सेवातुल्यं च सम्मतम् ॥

என்பது.

10 * * *

"வரையுமியந் திரமாதி கருதவேண்டா" என்பது ஔஷதவாமி மதமும் மறுப்புங் கூறுகின்றது. ஈண்டு "மறுப்பில் முத்தி நெறியுணர்வு" என்றது ........"தின்பண்டம் காயம் போன்றுதலால்" என்றது அவன்நித்திய மென்றதற்கு மறை. மற்றனைத்தும் வெளி. இம்மதம் சருவ சித்தாந்த விவேகத்தில் வருமாறு:-

अथात्रौषधवादे तु सर्वमौषधसेवया ।
साध्यमेवेति सिद्धान्तस्तद्धि शक्त्यात्मकं मतम् ॥
ततस्तत्तन्त्रसंसिद्धकायकल्पादि सेवया ।
मण्डलाद्युक्तकालेन जननादिश्च नश्यति ॥

देहकान्तिर्महत्त्वं च देहस्य नियतं भवेत् ।
आकाशगमनादिश्च सिद्धिर्मुक्तिश्च सिद्ध्यति ॥
किं फलं मन्त्रयन्त्रादिसेवयेति विनिश्चितः ।

என்பது

11 * * *

"அன்றே நல்வினை" என்பது கருமவாமி மதமும் மறுப்பும் கூறுகின்றது. ஈண்டு நல்வினை யென்றது முத்தியை. மற்றனைத்தும் வெளி. இம்மதம் சருவ சித்தாந்த விவேகத்தில் வருமாறு:-

अथातः कर्मसिद्धान्ते सर्वं कर्मवशादिति ।
औषधेन तथा यन्त्रमन्त्रजातैश्च किं फलम् ॥
जातं क्षयं सुखं क्लेशं वार्धकं मरणं तथा ।
एवमुक्तं तु षट्कं च गतसंकल्पनिश्चयम् ॥
जन्मारोग्यं श्रुतं श्रीजनितमथ यशो बन्धुदाराश्च पुत्रा
भृत्याःक्षेत्रं गृहाःस्युर्वितरणमपि गीर्देहकान्तिर्महत्त्वम् ।
प्रीतिर्मित्रं सखायः शुभमपि च विपत्कालमृत्युर्नराणां
पूर्वाभ्यासानुरूपं विधिविहितवशादेति कालं प्रपद्ये ॥
इत्यतो हि नवीनैः किं स्वप्रयत्नैस्तथाविधैः ।
अत एव तथा लोके शास्त्रेष्वपि च विश्रुतम् ॥
भवितव्यं भवत्येव नालिकेरफलाम्बुवत् ।
गन्तव्यं गच्छति सदा गजभुक्तकपित्थवत् ॥
कुब्जं च काणं विकलं च पङ्गुं मूकं च मूर्खं मतिविभ्रमं वा ।
देवानुकूलेन वृणोति सम्पन्न पौरुषं कुत्रचिदस्ति कान्ते ॥
इदं मया प्राप्तमिदं प्रपत्स्ये इदं करोमीति वृथा जनोऽयम् ।
वदत्यहोऽज्ञानवशोऽनवद्ये न पौरुषं कुत्रचिदस्ति कृत्ये ॥
सपुत्रदारः सपशुर्धनाढ्यः सामर्थ्यतोऽस्मीत्यवपद्यते यः ।

स विप्रकर्षे किमुपैति शोकं द्विपात्पशुर्ज्ञानबहिष्कृतश्च ॥
इति सञ्चिन्त्य कर्मानुसारिणी बुद्धिरित्यतः ।
न्यायादेव यथा बुद्धिर्यत एव प्रवर्तते ॥
तथा तत्र प्रवृत्तः सन्नान्यथा कुत्रचित्स्वयम् ।
सुखदुःखादि विषये नालसो मुक्तिभाग्भवेत् ॥
इत्येवं कर्मवादश्च कथितः सङ्ग्रहेण तु ।

12 * * *

"ஞானவடிவாஞ் சித்தி" என்பது அத்துவிதவாமி மதமும் மறுப்பும் கூறுகின்றது. இது தானே பொருள் விளங்கும். அது வருமாறு:- சர்வ சித்தாந்த விவேகத்தில்,

अद्वैतवादिपक्षे तु सर्वं शक्तिविवर्तकम् ।
तथा शक्तिविवर्तेन विना किञ्चिन्न दृश्यते ॥
कर्म माया च लोकश्च तथा जीवेश्वरौ शिवः ।
पशुपाशादि सर्वं च विना शक्त्या न हि स्फुटम् ॥
इति विज्ञानमात्रेण मुक्त एव भवेन्नरः ।
ब्रह्महा मद्यपः स्तेयी त्वगम्यागमनोऽपि सः ॥
कुतो वा कर्मणा मुक्तिस्तथैव श्रूयते वचः ।
ज्ञानादेव हि कैवल्यं नान्यथा कर्मकोटिभिः ॥
नाभुक्तं क्षीयते कर्म कल्पकोटिशतैरपि ।
इत्यादिवचनं सर्वमज्ञानिविषयं मतम् ॥
एवमद्वैतसिद्धान्तो वामभेदे निरूपितः ।

என்பது.

13 * * *

"திகழ்ந்த பராசத்தியை" என்பது துவித வாமி மதமும் மறுப்பும் கூறுகின்றது. பொருள் வெளி. அது சர்வசித்தாந்தவிவேகத்தில் சொல்லப்பட்டது.

द्वैतवामागमे सिद्धः पदार्थस्त्रिविधो मतः ।
शक्तिः पशुश्च पाशश्च नत्वेका शक्तिरित्यथ ॥
आत्मा च शक्तिवत्साध्यस्ततः सर्वज्ञतादिमान् ।
अनादौ मलसम्बन्धात्तज्ज्ञानादि न राजते ॥
तथा ज्ञानादिसंसिद्धौ शाक्तदीक्षापुरःसरम् ।
गुरोरेव मुखात्प्राप्ततन्त्रज्ञानपरायणः ॥
चर्यया वाथ योगेन पूजादिक्रियया पुनः ।
उपास्त्या शक्तिभेदानां साक्षाच्छक्तेरतोऽथवा ॥
मुक्त एव भवेन्नायं केवलेन तु कर्मणा ।
विज्ञानेन च मुक्तात्मा शक्त्या च भ्राजते सदा ॥
मुक्तौ सुनिर्मलः सर्वज्ञताधर्मादिसंयुतः ।
इत्येवं द्वैतवामाख्ये सिद्धान्तश्च निरूपितः ॥

என்பது.

14 * * *

"அரனறிவு" என்பது மிச்சிரவாமி மதமும் மறுப்பும் கூறுகின்றது. இதுவும் வெளி. அது சர்வசித்தாந்த விவேகத்திலே சொல்லப்பட்டது.

अथातो मिश्रवामे तु पृथक्त्वेऽपि परस्परम् ।
त्रयाणां च पदार्थानां व्याप्त्या तस्याश्च शक्तितः ॥
सर्वेषां मिश्रसिद्धान्ते सर्वं शक्तिमयं स्मृतम् ।
शिवश्च तस्य देहश्च ज्ञानावरणमेव च ॥
तथात्मा तस्य देहादि तदेवं भुवनानि च ।
शक्तिरूपमिति ज्ञात्वा शाक्ततन्त्रोक्तवर्त्मना ॥
साध्या च मधुमांसादिसंपादनपुरःसरम् ।
पूजया होमतो वाथ जपेन ध्यानतः पुनः ॥
शक्त्युपासनया मुक्तिर्मुक्तः शक्त्यात्मको भवेत् ।

न शक्तेर्भिन्न एवायं शक्त्या मिश्रो यतः पुनः ॥
न समश्च भवेच्छक्त्या तथानेकेशवादतः ।
इत्येवं मिश्रवामे तु तदर्थोऽपि निरूपितः ॥

என்பது.

"தாங்கு மாதார சத்தி" என்பது சித்தாந்தவாமி மதமும் மறுப்பும் கூறுகின்றது. பொருள்வெளி. இம்மதம் வருமாறு:- அதிலேயே.

अथातो वामसिद्धान्तः संग्रहेण निरूप्यते ।
वामाद्यष्टागमप्रोक्तमङ्गीकृत्य यथोचितम् ॥
प्रत्यक्षादीनि मानानि प्रागुक्तान्येव तानि वै ।
शक्तिश्च पशुपाशौ च पदार्थस्त्रिविधो मतः ॥
अनन्या शक्तिरन्येषां सर्वेषां व्याप्तितो मता ।
वामादिषु च सर्वेषु कृतकृत्योऽत्र साधकः ॥
तीव्रतीव्रतरत्वेन शक्तिपातेन संयुतः ।
शाम्भवीदीक्षया मुक्तः सदुपायबलेन च ॥
सदुपायस्तु सन्मार्गज्ञानयोगादिकः स्मृतः ।
आधाराद्या बहुविधा सा ह्यनुग्रहरूपिणी ॥
ध्येयाऽऽदित्यादिवद्ध्यानात् सा शक्तिः पारमेश्वरी ।
इत्येवं वामसिद्धान्तः संग्रहेण समीरितः ॥

என்பது.

இவ்வாறாயின், முதற்கட்கூறிய வாமமதத்திற்குப் பேதம் என்னையோ எனின். அது எல்லாம் சத்தி பரிணாமம் என்னும் பரிணாமவாதமாகலிற் பேதமுண்டு என்க. அது வருமாறு:- அந்தச் சருவசித்தாந்த விவேகத்தில்,

आदितो वामपक्षे तु तत्सिद्धान्तो निरूप्यते ।
शाक्तं सामान्यतः प्रोक्तमङ्गीकृत्य यथोचितम् ॥
शक्तिरेव जगत्कर्त्री सा पुनः स्यात्सहस्रशः ।

समारभ्य पराशक्तेः क्रियाशक्त्यन्तभेदतः ॥
तद्रूपपरिणामेन जगत्सर्वं चराचरम् ।
मन्त्रेश्वराद्यः सर्वे ततोऽन्ये जीवकोटयः ॥
वष्कादिशब्दभेदश्च तत्त्वाद्यर्थभिदा पुनः ? ।
ज्ञेयभेदाश्च ज्ञानं च ज्ञापकश्च ततोऽन्यथा ॥
यदस्ति सर्वं तच्छक्तिमूर्तिरूपं तथा जगत् ।

என்பதும்,

स्थूलासु मूर्तिषु महीप्रमुखासु मूर्तेः
कस्याश्च नाम तव वैभवमम्ब यस्याः ।
पत्या गिरामपि न शक्यत एव वक्तुं
साऽसि स्तुता किल मयेति तितिक्षितव्यम् ॥

—அம்பா. 30

என்பதும்,

शिवरूपं च सा शक्तिर्बहुनोक्तेन किं पुनः ।
एवं विज्ञानवान् मूलनवसिद्धान्त (यामलागम) वर्त्मगः ॥
वैष्णवादिषु बाह्येषु शैवभेदेषु वा पुनः ।
भैरवादिषु भेदेषु कृतकृत्यः पुरा नरः ॥
कर्मसाम्यादिसंसिद्धशक्तिपातविशेषतः ।
वामतन्त्रोक्तमार्गेण सद्गुरोर्लब्धदीक्षया ॥
चर्यादीनामनुष्ठानात् साधको मुक्तिभाग्भवेत् ।
इत्येवं वामसिद्धान्तः कथितः सङ्ग्रहादिह ॥

என்பதும்.

16 * * *

"இன்னணம்" என்பது வாமத்தின் புறச்சமய அகச்சமய பேதமதமும் மறுப்பும் கூறுமாறு பொதுப்படக் கூறியது. புறச்சமயமாவன, முற்கூறியவாறே நியாயாதிகளெட்டுமாம். அகச்சமயமாவன, சைவாதிகள் எட்டுமாம். அன்றி,

लोकायतोऽथ बौद्धश्चार्हतो मीमांस एव च ।
मायावादः पाञ्चरात्रं षडेते समया बहिः ॥
शैवं पाशुपतं वामं भैरवं तु महाव्रतम् ।
कालामुखमिति ख्यातमन्तःसमय षट्ककम् ॥

எனவரும் ஆறு எனினுமாம். அது,

"ஒன்றது பேரூர் வழியா றதற்குள
வென்றது போலு மிருமுச் சமயமும்
நன்றிது தீதிது வென்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே" 1555

என்னும் திருமந்திரமாலையானும் உணர்க. இஃதிரட்டுற மொழிதல் பற்றி நின்றது. இனிப் பூருவபக்ஷங்களைப் புறமாக நிராகரிப்பதன்றித் தத்தந் தந்திரபேதமான அத்துவிதாதி வாம பேதங்களையும் வைத்து நிராகரிக்கிறது எல்லாமதத்திற்கும் ஒக்குமேனும், ஈண்டு அகச்சமயமான காளாமுக பாசுபத மகாவிரத வைரவாதி கட்கும் உண்டென்பது தோன்ற "அகச்சமயத்தெல்லாமுண்டாம்" என்றுவிதந்தது. அகச்சமயங்கள் பெரும்பான்மையும் உலகத்து வழங்காமையின் இப்பேதங்கள் அவற்றிற்குண்டோ இன்றோ என்னும் ஐயமறுத்தற்கும் அதனையே பின்னும் வற்புறுத்தற்கும் "வாமஞ் சுத்த சைவமென்றிரண்டிற் கண்டிடலால்" என்றது. ஈண்டுச் "சுத்த சைவம்" என்றது அகச்சமயத்துளேடுத்த தக்ஷிண மதத்தை. அது மேல் விளங்கும். இதனானே யன்றே சித்தாந்தத்திலும் புறச்சமயம் ஆறும் அகச்சமயம் ஆறும் அன்றி,

शैवभेदं प्रवक्ष्यामि ऐक्यपाषाणवादिनौ ।
भेदवादी समवादी सङ्क्रान्ती चाविकारवान् ॥
परिणामी च शैवश्च सिद्धान्ती पर ईरितः ।

என்பனவும் பிறவும் வந்ததூஉம். இவ்வாறு பிறவும் வைத்து மறுப்பிற் பெருகு மாதலால் இந்த நியாயங்கொண்டு மற்றும் ஊகத்தான் நிராகரிக்கக்கடவதெனக் கூறுவான், இங்கு "மறுத்துப்போன மறையு மேனை அகச்சமயத்து மியம்பலாம்" என்றது.

17 * * * *

"இத்திறத்திற் சித்தி" என்பது இவ்வாறு புருஷார்த்த தாயகமான வூழித்தைப் பூருவ பக்ஷமென்றும் அகத்திற்குப் புறம் என்றுஞ் சொல்லியதற் கேது கூறியது. "ஈண்டுச் சக்திதத்துவப் பிராப்தி சத்ர்யபி வியக்தி யென்றது.

शक्तितत्त्वे तदद्वैताः शिवतत्त्वे परे स्थिताः ।

என்னும் சித்தாந்த ரகசியத்தாற் காண்க.

அவ்வாறு வந்தது மேலுள்ள சிவத்தை யறியாமையின். இம்மதமகப் புறமானது.

वामं च दक्षिणं चैव तद्द्वयोर्मिश्रकं तथा ।
शैवा बाह्याः समाख्याताः शैवा अपि न पूजिताः ॥

என முற்காட்டிய சுப்பிரபேத வசனத்தாலுணர்க.

18 * * *

"மறையவர்தாம் வேள்வியில்" என்பது வேதத்திற் சோன்னவாறே மாம்ஸபக்ஷணம் போல வாமநூலிற் சொன்னவாறே மதுமாமிச நுகர்தல் குற்ற மன்று என்பதை மறுத்தது; இருவரும் பூருவ பக்ஷிகளேன்பதோத்தலின் பிறவேளி.

19 * * *

"கருது வாமிகள் சூலம்" என்பது வாமசமயிகள் வேடநிலை கூறியது. அது,

शङ्खास्थिभूषणैर्युक्तं मद्यमांसं तु सेवितम् ।
शूलं कपालं खट्वाङ्गमित्येतच्छाक्तलक्षणम् ॥

எனக் கூறப்பட்டது. பிறவும் இம்மத மறுப்பின் வேண்டுவன விரித் துரைத்துக்கோள்க,

இங்ஙனம் கூறியவற்றுள் ஐந்து பாடல் அகச்சமயம் படும் பகுப்பும் மறுப்பும் போகப் பதினைன்கு பாடல் வாமமதமும் மறுப்புமாம்.

## இனி வைரவ மதம்

20 * * *

"தக்க வகையான்" என்பது வைரவ மதவாதிகள் பேறும் புருடார்த்தம் கூறுமுகத்தால் அவர் வேட நிலையும் கூறுகின்றது. அந்த வைரவ சைவர் வேட லக்ஷணம்,

ए ... तत्वकः ।
त्रिवह्यकीं अद्यार्थमेकीभावस्थितं नहि ॥
तस्मात् ... प्रज्ञा तदात्मा परसंस्थितः ।
तत्कालप...ना त्वस्यकारणम् ॥
प्रज्ञाभावसंसिद्धं शुद्धकेवलसंस्थितम् ।

என வருமாற்ருனுணர்க. அன்றி நிராமயதேவர் நூலில்,

"உணர்ந்திடு மிதுவே யான்ம சுத்தமா மென்ன வுன்னித்
தணந்திடு .... ம் யானென் ... மென்னக்
குணம்பேறு ... மைந்தன் கோள்கைகோ னின்று நீவி
யிணங்கலோன் றிலாத கால பரத்தனு யேக ஞுன்."

"அசைவுற்று முன்னு வசைவுற்று நின்ற வசைவான காலபரமாம்
மிசைவுற்று நின்ற விசைசற்றுமின்றி மிகுதத்வசால மிதனே
டோசிவுற்ற மாயை யுயிரால்வி லாச முடனுன தூடணம்விடா
னசைவுற்று நின்ற நிலைகாண்விகார மெனலாம்நனுவ திதமே."

எனவும் வருமாறு கண்டுகோள்க. இறுதியிற் றுரியதரிசனம் வந்தவாறு காண்க. நனுவிலதீதமேன்பது ஈண்டுத் தோடைநோக்கி யதீதமெனக் குறைந்து நின்றது. ஈண்டுக் கூறிய முன்னதனுட் காலபரத்தனுயேகனுனு னென்றமையிற் பரத்தோடு சீவனைக் கூட்டிக் காலபரங் கலப்பிக்குமேன்பது திருமந்திரத்தில்,

"என்னை யறிந்திலே னித்தனை காலமும்
என்னை யறிந்தபி னேது மறிகிலேன்
என்னை யறியும் அறிவை யறிந்தபின்
என்னையிட் டேன்னை யுசாவுகின் றேனே."? (2366)

எனவும்,

"அறிவு வடிவேன் றருள்செய்தா னந்தி
அறிவு வடிவேன் றருளா லறிந்தேன்
அறிவு வடிவேன் றருளா லறிந்தபின்
அறிவு வடிவேன் றறிந்து மிலேனே." (2357)

எனவும்,

"துரிய தரிசனஞ் சோற்ரேம் வியாத்தி
யரியன தூடணம் பின்னன வாதி
பேரியன கால பரம்பிற் றுரிய
மரிய வதீத மதியத்த தாமே." (2225)

" கால பரத்தி லசைந்துந் துரியத்துச்
சால விரிந்துங் குவிந்துஞ் சகலத்தில்
ஆயின வாருரு றடைந்துந் திரிந்தேறுத்
தூய வருடந்த நந்திக்கேன் சொல்வனே "

எனவும் வருமாற்றுன் உணர்க. இனிப் "பரவியோமம் பரம்" என்பதற்கு வருமாறு. ஞானசித்தியில்,

जाग्रं तुर्यं चतुर्थं च तत्कालपरपञ्चमम् ।
परव्योमं तु षष्टं च परावस्था तु सप्तमम् ॥

எனவும்,

परमव्योम्नि सिद्ध्यर्थं जीवन्मुक्तिप्रकाशकम् ।
तत्प्रकाशकचैतन्यं परमात्मन्यवस्थितम् ॥
परावस्थाप्रकाशस्तु अवस्थातीत गोचरम् ।
आकाशशरीरं ब्रह्म तुर्यातीतं परं शिवम् ॥

எனவும் வருமாற்றுனுணர்க. இவ்வாறு திருமந்திரத்திலும்,

" தற்பர மன்னுந் தனிமுதற் பேரொளி
சிற்பரந் தானே சேகமுண்ணும் போதமுந்
தோற்பதந் தீர்பாழிற் சுந்தரச் சோதிபுக்
குப்புற மற்றதிங் கோப்பில்லை தானே " (2462)

" துரிய நனவா மிதமுணர் போதந்
துரியக் கனவா மகமுணர் போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியந்
துரியம் பரமெனத் தோன்றிடுந் தானே " (2205)

என வரும். இனித் தத்துவாமிருதத்தில்,

" பரமன்றன் சுருதி தன்னைப் பழமறை பரவி யோமம்
பிரிவுறத் திகழாக...சரீரம் நற்பிரமமென்றே
யுரவிய பரமான் மாவி னுபாதிசோல் லுதலா லத்தைத்
துரிசகற்ககழ் ... சித்தேசுத்த ... த்த மாமே "

எனப் பரவியோமத்தியல்பு வருமாறு காண்க. இனிப் பரன் கனவிற் படைப்பாதி மூன்று முண்டேனப் பெரும்பான்மை பகுத்தோதாமையின் சீவதுரியத்திற் சான்று

யிருந்தபோதமே காரணமாயோபாதிகளாற் சர்வஞ்ஞத்துவாதி யேழும் நிகழ நின்ற விடம் பரசாக்கிரம். அவையழுங்கிநின்ற விடம் கனவாம். அந்த வசைவுமற வோடுங்குதல் சுழுத்தி யெனினுமாம். அதுபரிபூரண சித்தியில்,

" சான்றென விரிந்த போதம் சாக்கிரந் தான் ...
ரேன்றுத ரூன்ம ழுங்கல் சொப்பனஞ் சொன்ன வித்தி
லூன்றிய வசைவு தீர வோடுங்குதல் சுழுத்தி யிந்த
மூன்றுமே பரன வித்தை யெனமொழிந் திடுவர் மேலோர் "

எனவும், தத்துவாமிருதத்தில்,

" ஓதிய சகல ஞானு திகளேலா மோளிருந் தேய
மேதது பரமன் றன்சாக் கிரமதா மழுங்கிற் றெங்கே
யாதது பரமன் றன்பாற் கனவதா மாண்ட தேங்கே
யோதிய பரமன் றன்பா லுபாதியாஞ் சுழுத்தி காணே "

எனவும் வருமாற்றுனுணர்க. " சிருட்டி திதி யோடுக்கம் அப்படியா மூன்றினேடு மாதல் பரங்கனவாமது கால பரமாகும் " என்புழி முன்னுன்குமன்றிச் சிருட்டியாதி மூன்றும் நிகழாமையின், அவ்வேழுங் கூடிக் காலபரத்தில் அசைந்து மழுங்கின வவதராங் கனுவேன்ப. திருமந்திரத்தில் " கால பரத்திலசைந்து " என்றது இந்த மழுங்கலாகிய வாசனையைப் பண்ணுமுபாதி. காலபரமேன்றுமாம். பிறவும் விரித் துணர்ந்து கோள்க.

௰ * * *

தன்மயம் என்பது சிவசாக்கிராதி நான்கவத்தைகளும் கூறுமுகத்தாற் சூக்குமப் பிரணவாதிகட்கு வருமவத்தா பேதங்களும் இவ்வாறென்கின்றது. அது ஞானசித்தியில்,

परव्योमं तु षष्ठं च परावस्था तु सप्तमम् ।

என்றபின்,

विश्वग्रासाष्टमं चैव उपशान्तो नवस्तथा ।
शिवश्रेष्ठा दशं चैव वाक्यावस्था समीरिता ॥

என நவாவத்தை வருமாறு உணர்க. இன்னுமதிலே.

अणुर्महत्वं तद्वयासं जीवात्मपरयोदितम् ।
एतदर्थं तदर्थं च तत्पदं परमं पदम् ॥

विश्वग्रासं परं गुह्यं सर्वात्मशिवमुद्भवम् ।
तत्सर्वं व्याप्तिसंयुक्तं तच्छून्यं शान्तिसम्भवम् ॥
तच्छिवावस्थितं शान्तं शान्त्यतीतं परात्परम् ।

என வருமாற்ருனுமுணர்க. இவற்றுள்,

अणुर्महत्त्वं तद्व्याप्तं जीवात्मपरयोदितम् ।
एतदर्थं तदर्थं च तत्पदं परमं पदम् ॥

" செவிமெய்வாய் கண்முக்குச் சேரிந் திரிய
மவியின் றியமன மாதிக ளைந்தும்
குவிவோன் றிலாமல் விரிந்து குவிந்து
தவிர்வோன் றிலாத சராசரந் தானே." (திரும. 2589)

ஈண்டுச் சேவி....பிரபஞ்சங் கூறியவாற்ருல் விசுவக் கிராசமும் சாரீரப்பிரபஞ்ச நிவிர்த்தி என்பதாம். இவ்வாறு வியட்டி நிகழ்ச்சி, சமட்டிக்குக் காரணமாகலின்,

" உடலா யுயிரா யுலகம தாகிக்
கடலாகிக் கார்முகி னீர் பொழி வானுகி
யிடையா யுலப்பிலி யெங்குந் தானுகி
யடைவாம் பெருவழி யண்ணி நின்ருனே." (திரும. 413)

உலகமேலாந் தன்மயமாயிருத்தல் கூறியவாறு. அன்றேற் காரணோபாதி புறம்பாமுலகியற்றுவதலாற் கூடா எனவே விசுவமேலாந்தன் மாதலா....ம் விபுத்துவத்தால் வரு நிறைவு அது அறிவானந்தசித்தியில்,

" ஒழிவற வேசக மெங்கும் நிரம்பி யொளிரும்பர
மிழிவுறு கின்ற சேகத்தலைந் தாள் பர மென்செயுமீ
கழிவற வேயிது செப்பா யெனக்கண்க ணீர்மல்கியே
மொழியு நிலையறி யேனிது செப்பெங்கள் முன்னவனே " (298)

" உறைந்து சேகத்து முன்னுண்டில்லை யென்றதிங்
கோர்ந்திடவே
நிறைந்து பரமது நீயேதுவாகும்
நிலையறிவால்
சிறந்த வனுபவத் தார்க்கன்றி யார்க்குந்
தெரிவரி தென்று
அறைந்தது காணு மருமறைநீ
யிதை யாய்ந்துகொள்ளே." (299)

என வருமாற்ருன் உணர்க. இனிக் "கனவவத்தை விழுங்கே" லென்பது விசுவக்கிராசம் சிவனது கனவவத்தை யென்றவாறு. அது, எல்லாஞ் சிவமய மாகப் பார்த்துத் தேகாதி பிரபஞ்சங்களுந்தோழிதல், அது ஞானசித்தியில்,

विश्वग्रासं परं गुह्यं सर्वात्मशिवमुद्भवम् ।
तत्सर्वं व्याप्तिसंयुक्तं तच्छून्यं शान्तिसम्भवम् ॥

என முன் உதாகரித்தவாற்ருன் உணர்க. திருமந்திரத்திலும்,

" தானே திசையு மைம்பூதமுந் தத்துவ
மாளு தபோதமு மாணவ போதமு
மூளு ளுபாதி யுடனேழு முள்ளமு
மாளு வகிலமு மத்தனு மாமே.

" மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதல் பூதம். " (2290)

" பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றப்
பரஞ்சோதி யென்னுட் படிந்ததன் பின்னைப்
பரஞ்சோதி யுள்ளியான் படியப் படியப்
பரஞ்சோதி யென்னைப் பரையோடுண்டானே." (2842)

" பரனேங்கு மாகிப் பரமாகி நின்ற
திரமெங்க ளுகச் சேறிவேங்கு மெய்தி
யரனங்க ளுவு மகத்து மென்ருகும்
வரமுன்னது கண்டியான் மாண்டற்ற வாறே. " (2590)

எனவரும். இவ்வாறு நிராமயதேவர் நூலினும்,

" வாங்கு காந்த சந்நிதி வயங்கிரும்பு போலவும்
வோங்கு நல்லிரவிமுன் னுலகர் சேட்டைபோலவுந்
தீங்கு செய் பொறிகளும் நிறைந்த வாயுவுந் திகழ்ந்
தே ... ... ... ... ...

...தோடுங்கிநி......லைதிரைசீ ... ரமானவை
யேல்லாம் டன்மீது...வாயில்
வா ... ம நிலவு சாரசரம் நீடுல கேல்லா
யமாகி யோடுங்கும்.

என வருமாற்ருன் உணர்க. ஈண்டுப் "பரம்" என்றது அபேதோபசாரத்தாற் சிவனும் .... நன்மை .... தருமுபசாந்தம் உபாதி யென்பது முன்னுதாகரித்த வற்றுள்,

तत्सर्वं व्याप्तिसंयुक्तं तच्छून्यं शान्तिसम्भवम् ।

என்பதனுல் விளங்கும். திருமந்திரத்திலும்,

" தொழிலிச்சை ஞானங்க டோல்சிவ சீவர்
கழிவற்ற மாமாயை மாயையி னுகும்
பழியற்ற காரண காரியப் பாழ்விட்
டழிவற்ற சாந்தாதீ தன்சிவ னுமே. " (2334)

எனவும் பிறவும் வரும். இவ்வாறு நிராமயதேவர் நூலினும்,

" தத்துவந் தீர்ந்த பாழுந் தனையறிந் தற்ற பாழு
முத்தம வுபசாந் தத்... முன்னிய மூன்று பாழுந்
தோத்திடு மாயை யோடுந் தோல்பரா சத்தி யோடுந்
சித்து...சிவசத்தி...பாற்றிருந்தது திரிதல் காண்டி... "

" காரிய காரண வுபாதி கைவிட
வோரியல் பாமுப சாந்த முற்றதே
யேரிய லுயிர்பர மிரண்டி னைக்கியமு
மோரியல் பாகிவே றின்றி யென்றதாம். "

என வருமாற்றுன் உணர்க. "எல்லாம் நழுவின பேருணர்வாகு முயர்ந்த சிவதுரிய" மென்பது ஞானசித்தியில்,

तत्सर्वं व्याप्तिसंयुक्तं तच्छून्यं शान्तिसम्भवम् ।
तच्छिवावस्थितं शान्तं शान्त्यतीतं परात्परम् ॥
उपशान्तिर्ज्ञपितः प्राप्तं परजीवैक्यसाधनम् ।
आत्मा परशिवं चैते त्रिपदार्थत्रिशोधनम् ॥

என வருமாற்றுன் உணர்க. இவ்வாறு திருமந்திரத்திலும்,

" காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக்
காரண மேழ்கண் டறும்போதப் பாழ்விடக்
காரிய காரண வாதனை கண்டறுஞ்
சீருப சாந்தமுப் பாழ்விடத் தீருமே. " (2495)

" காரிய காரணங் காணு முப்பாழ்விடச்
சீரிய தான சிவமென லாமே. "

எனவும் பிறவும் வரும். இவ்வாறு நிராமயதேவர் நூலினும்,

" ஒழியாவுப சாந்தம தாயுளதுங்
கழியாவிடு காரண காரியமே
மொழியாவகை யாலுல கற்றவிடத்
தழியாவுணர் வேசிவ மாவதுவே. "

என வரும். இந்நிலைதான் "குருவடிவாஞ் சுயம்பிரகாசமுமே" யென்பது ஞான சித்தியில்,

ज्ञानज्ञेयं ज्ञातृकान्तं त्रिपदार्थं समुच्यते ।
तस्मात्स्वरूपं सर्वत्र प्रकाशानन्दविग्रहम् ॥
तत्प्राप्तिस्तत्परा मुक्तिः शिवजीवैक्यसम्भवम् ।

எனவும் சிவதுரியமடியாய் வருஞ் சொரூபானுபவமுண்டாமென்கிறது,

" சிவமாம் நனவுந் திரிந்தெங் குமரன்
தவமார் கனவுந் தனிஞா ன்மதும்
அவமா மலமாற் றலுமகன் றப்பாற்
றுவமார் துரியஞ் சொரூப மதாமே"

என்னும் திருமந்திரத்தானுமுணர்க. அன்றி நிராமயதேவர் நூலின்,

" யாவையுஞ் சிவமே யாதி யல்லவா மானந் தத்து
மேவிய சைதன்னிய மிகுதரு சொருப
... ... ... ளுதரு சொருப மோதி
லாவயிற் சத்தி சத்திய ஞானவாநந்த ...

எனவரும் பிறவும் வருமாறு கண்டுகொள்க. இது தூலப்பிரணவமென்றும் வாக்கியப்பிரணவமென்றும் சொல்லவரும். இதன்மேல் சுசுவரூபப் பிரணவமென்றும் சூக்குமப் பிரணவ முதஞன்கிற்கும் தூலப்பிரணவம் .... .... றேனினும் ஞானத்தோற்றம் வியாபகங் குவியு மூன்று மவத்தையாமாறு மேல் விளங்கும். ஆண்டுஞ் சொரூபானுபவமுண்டாம். அது,

" துரியங்கண் மூன்றுங் கடந்தொளிர் சோதி
யரிய பரசிவம் யாவையு மாகி
விரிவு குவிவற விட்ட நிலத்தே
பெரிய குருபதம் பேச வொண்ணுதே " (2657)

என்னும் திருமந்திரத்தால் உணர்க. இவ்வாறு நிராமயதேவர் நூலினும் வரும்,

" ... ... ... ... ...

......நூன்மே சொல்லுங்காலே நன்றுறு நாடிய
சுழுத்தி தன்பாற் சொரூபந் துரியமாய்த் தோன்றுமன்றே "

என்பதனாலும் உணர்க. இவ்வாறன்றி,

¹ पुरुषतत्वं ² आत्मा ³ कालपरं ⁴ परव्योमं ⁵ परात्परं ⁶ विश्वग्रासं ⁷ उपशान्तम्

என்னும் ஏழுள் புருஷதத்துவம் ஆன்மா விரண்டின் றரிசனமுஞ் சீவாவத்தைகள் காலபரம், வியோமபரம் பராத்பரம் என்னும் மூன்றும் உள. இவ்வைந்து....அவத்தைகளை விசுவகிராசம் உபசாந்தமென்னும் இரண்டோடு கூட்டி யேழென்றதென் னையோ வெனின், துவம்பதம் தத்பதவைக்கிய சித்தியினுற் சிவாவத்தைகளாய் வந்து முடிதலின் அநுவாதமாக வேழென்ற தென்க. அது ஞானசித்தியில்,

द्वयोरैक्यं तु संप्राप्ते पराप ... पः
असिपदं शिवरूपं द्वयोरैक्यं प्रकाशितम् ॥

எனவும் திருமந்திரத்தில்,

" இடனொரு மூன்றி லிசைந்த வொருவனும்
கடனுறு மவ்வுரு வேறெனக் காணுந்
திடமது போலச் சீவ பரசிவ
னுடனுறு பேதமு மொன்றென லாமே " (4585)

என வருமாற்றானுமுணர்க, இப்பேதந் துரியங்கள் சாத்திரமாகவும் கூறுமாறு போலக் கோடலாம். இவ்வேழிற்கு மூலாகமம் முன்னுதாகரித்ததாம். பிறவாறு முளவேற்காண்க.

91 • • •

"மனன மிங்கிலேயில்" என்பது மனனங்கூறி நிதித்தியாசனத்தினிகழும் நிட்டானுபவமினிக்கூறுது மென்கின்றது. ஈண்டுக்கூறிய இருபத்தேழவத்தை யாவன:- தூலப்பிரணவத்திற் சீவன்முத்தி பரமுத்தி சிவமுத்தி சொரூப முத்தி யென்னும் நான்கும் துரியத்தினிகழும் பத்தவத்தையிற் சொரூபந் தள்ளி யொன்பதுமிச் சொரூபமடியாகப் பிறக்குஞ் சூக்கும பிரணவ முத்தி மூன்றும் அதி சூக்கும மகாசூக்கும ஆனந்தப் பிரணவ மூன்றுமாக அறுவகை முத்தியினுஞ் சொரூபமடியாய்ப் பிறத்தலின் அஃதொழித்துப் பதினெட்டு விதமாம் அவத்தைகளு மாம். இவையெல்லா முற்கூறியவாறே தூலப் பிரணவஞ் சூக்குமப் பிரணவம் அதிசூக்குமப் பிரணவம் மகா சூக்குமப் பிரணவம் ஆனந்தப் பிரணவமென்னும் ஐந்து பிரணவாவத்தைகளாயடங்கு மென்க.

92 • • •

" அநுபவமாங் தெளிவிஞேடு " என்பது சம்பிரதாயோபதேசம் பண்ணுதற் குரிய சாதன முதலானவற்ரு னிகழ்த்துந் திருவடி வைப்பாம் ஞானதீக்ஷையாமாறு கூறுகின்றது. ஈண்டுக் " குருநாதரடியிணையை நிகழ் வெண்மை செம்மை " யென்றது ஞானசித்தியில்,

रक्तं शुक्लं द्विधामिश्रं प्रभाकरप्रकाशकम् ।
पदं स्थितं .... ....

என வருமாற்ருன் உணர்க. இனித் திருமந்திரத்தில்,

" தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு
தாடந்து தன்னையறியத் தரவல்லோன்
ருடந்து தத்துவா தீதத்துச் சார்சீவன்
ருடந்து பாசந் தணிப்பிக்குந் தானே " (2049)

" காலுந் தலையு மறியார் கலதிகள்
காலந்தச் சத்தி யருளேன்பர் காரணன்
பாலொன்று ஞேயமே பண்பார் தலையுயிர்
காலந்தச் சத்தியைக் காட்டவீ டாகுமே " (2425)

எனவும் பிறவும் வருமாற்ருனுணர்க...............நான்கென்பது முதலானவற்றிற்கு முன்னுதாகரித்தவை கண்டு கோள்க.

93 * * *

" சீவசாக்கிரமாகும் " என்பது சீவாவத்தை நான்கினும் நிகழும் அநுபவம் கூறுகின்றது. " சீவ சாக்கிரமாகு மிந்திரியக் காட்சி " என்றது காரியோபாதி யேழோடுங்கூடக் கலந்தறிவதை,

" உயிரிஞே டுணர்வு வாயி லொளியுரு வாதிபற்றிச்
செயிரோடு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி " — சித்தி. 11

யென்றது ஈண்டைக்கேலாதாம்; ஈண்டு விகற்ப ஞானங்கூட நிகழ்தலின். " செறிகனவுக்காட்சி " என்றது அந்தக்கரணம் .... நான்குமுயிருங்கூடியறிதலை. இனி " சாக்கிரத்தில் சுழுத்தி " என்றது பிராணவாயுவோடுங் கூட வந்தக்கரண வியாபாரமொழிதலை. அது பரிபூரண சித்தியில்,

" சிறந்த நனவின்னனவதேதென் றெண்ணிற்
செப்புமனம் பொறி புலஞேர் பொருளிற்சேறல்
நிறைந்த நனவதிற் கனவதே தென்றெண்ணில்
நினை பொருளை மருவிமனம் நினையாநிற்றல்

அறைந்த கனவினிற் சுழுத்தி யதுவே தென்னில்
அறிபொருளும் மன நினைவுமழிந்து நிற்றல்
எறிந்த வெழு கடலணுவா யுருகு மன்பாய்
யிவற்றை யநுபவ மாக விருந்து பாரே.

என வருமாற்ருன் உணர்க. "மேவுமிங்கே யிருளகன்ற வறிவுண்டேன்று விளங்குயிரின் றரிசனமே துரியமாகும்" என்பது பரிபூரண சித்தியில்,

" திணிந்த விருளாய்ப் பாவனையாய்த்
திகழ்ந்த மாயை தனைத்தெரிந்தங்
குணர்ந்த பொருளே தோன்றுளதோ
வில்லை யோபார்த் துரையென்னப்
பணிந்து பரனே பகர்மூலப்
பகுதி யாதி பவவித்தாய்
அணைந்த மாயை தனையுணரு
மறிவுண் டுண்டேன் றதிசயித்தான். "

என வருமாற்ருனுணர்க. இனி யவத்தைக் கழிவிற்கு வருமாறு.

" அவத்தையொரு மூன்றையு மறிந்துகரி யாயே
எவற்றையு மழித்தோளிரும் ஏகவறி வாகத்
துவக்கற விறந்த துரியச்சுட ருணர்ந்தோர்
தவத்தலைவ ரேன்றுமறை தானறையு மன்றே. "

என நிராமயதேவர் நூலின் வருமாற்ருன் உணர்க. இவ்வாறு வரு மூன்றுயிர் வேறுபாட்டின்பின் சுத்த............நிகழுமாறு திருமந்திரத்தில்,

" ஆருறி லையைந் தகல நனுநனு
வாரு மவைவிட வாகு நனுக்கனு
வேருன வைந்தும் விடவே நனுவினி
லீருஞ் சுழுத்தி யிதின்மாயை தானே. " (2197)

எனவரும். இதனுனே திரோதாயி முதல்நான்கு மலமுங்........................அது,

" சாக்கிர சாக்கிரந்.தன்னிற் றிரோதாயி
சாக்கிர சோப்பனந் தன்னிடை மாமாயை
சாக்கிரந் தன்னிற் சுழுத்திதற் காமியஞ்
சாக்கிரந் தன்னிற் றுரியத்து மாயையே. " (2167)

என்பதனுல் உணர்க. இவ்வாறு கழலவே பிரம....பிராணபஞ்சகமும் நீங்கும். அது ஞானசித்தியில்,

जाग्रजाग्रस्थितं ब्रह्मा जाग्रत्स्वप्नस्थितो हरिः ।
जाग्रत्सुप्तिस्थितो रुद्रस्तमसा मोहिनी तथा ॥
जाग्रतुर्यस्थितेशस्तु .... .... तद्बन्ध ।
गुरुकारुण्यमात्रेण वं मलोदयम् ॥
.... .... प्रकाशार्थं जीवचैतन्यरूपकम् ।
जाग्र .... .... प्रोक्तं तुर्यात्मसम्भवम् ॥
त्वं पद्मात्मसम्भवम् ।
उपाधिशून्यजीवात्मा त्वं पदार्थस्य शुद्धिमान् ॥

என வருமாற்ருன் உணர்க. இவ்வாறு தன்னையறிவதனின் மிக்க பேறில்லை அது.

" தன்னை யறியிற் றனக்கொரு கேடில்லை
றன்னை யறியாமற் ருன்கெடு கின்ருன்
றன்னை யறியு மறிவை யறிந்தபின்
றன்னை யருச்சிக்கத் தானிருந் தானே." (2355)

என்னும் திருமந்திரத்தான் உணர்க.

94, 95 * * *

" இவ்விடைநின்றே கழன்ற " என்பதும், " போறியேனவே நியதமன்றி " என்பதும் பரசாக்கிரானுபவம் கூறும். ஈண்டுப் "போறியேனவே நியதமன்றி" யென்பதனுனறிந்த தோன்றறியா நியதமன்றி யெக்காலத்துமுணர்தல் என்க; அது ஈசுவர சுவபாவமாகலின். அனைத்தும் முன் காட்டிய உதாரணத்தால் விளங்கும்.

96 * * *

" பகர் தருமமவ்வேழினுள்ளு " மென்பது, முன்சொன்ன கனவுஞ் சுழுத்தியும் துரியமுமாமனுபவம் கூறுகின்றது. ஈண்டுப் பகர்தரு மவ்வேழினுள்ளும் ......டவமாகி முன்றும்...........ஒடுங்குங் கால பரத்தோடு நின்று கவரு முன்போலறிவு விரியாவண்ணம் தற்போதமாயிருத்தல் என்பதற்கு முன்கூறியவாறு யறிவு மழுங்கி நிற்றலெனக் கோள்க. அது விரியாவண்ணம் தற்போதமாயிருத்தல் என்பதனுனுந் தோன்றும். இதனுனேயன்றே,

" கால பரத்தி லசைந்து துரியத்துச்
சால விரிந்துங் குவிந்துஞ் சகலத்தில்
ஆயின வாருரு றடைந்துந் திரிந்தேற்குத்
தூய வருள் தந்த நந்திக்கேன் சொல்வனே "

என வந்ததூஉம். இப் பராவத்தையநுபவம் நிராமய தேவர் நூலின்,

" பிறிவற்றறி வாகிய பேற்றியெனு
வறிவிற்கறி வாகிய வப்பரமே
சேறிவிற்பரை யாலுயிர் செய்ததனு
ளுறைவுற்றது பூமண மொத்திடவே "

என வருமாற்ருன் உணர்க. ஈண்டுப் "பரையால்" எனவே யதனிற் றேன்றுஞ் சகளாதி பேதங்களுங் குண்டலி காரியமாய்ப் பரையிற் றேன்றிய பிறவு மீண் டொழியு மென்பதாம். அது அந்நூலின்,

" ஆதலாற் சகளரைக் கன்மம் யாவையு
மோதலாற் சொல்லுருபா ரூபங்களும்
யாதுமாய் முத்திக் கேதுவாம் யாவையு
ஓதுங் குண்டலினிக்கு ளுதித்தலே "

என வருதலின். மற்று முற்காட்டியவற்றுட் கண்டுகோள்க.

97 * * *

" இன்னிலையாம் பரதுரியம் " என்பது சிவாவத்தை நான்கின் அநுபவமுங் கூறுகின்றது. இச்சீவாவத்தையிற் சீவாதி மூன்றுமின்றித் திருக்கு திருச்சிய பேதமுண்டானதுமின்ருய் நிகழும். ஆனந்தாநுபவம் நிகழும். அது நிராமய தேவர் நூலின்,

" மாயையிற் றேன்றுஞ் சீவன்
வண்பரைத் தோன்று மீசன்
ஆவையிற் சிவையிற் றேன்று
மச்சிவன் மூன்றும் வேருய்
ஓவலில் வேதிரே கத்தால்
உறுதரு திருக்கு திர்ஸ்ய
மாவயிற் புணர்ந்த தோன்ரு
யன்றிநின்றமர்வதாகும் "

" சிவமாமறி வேங்கணு மாநிலைசேற்
றவமாறிய வானந்த மேலிடவத்

துவமாறிய மூவுரு வோருருவாய்ப்
பவமாறி ... ... ... ...மே ''

எனவும் பிறவும் வருமாற்ருன் உணர்க.

୨୪ * * *

'' வந்த சிவதுரியத்தின் கீழாயேன்பது'' சிவதுரியத்தின் ஒன்பதவத்தை யுங்கழியவே யெல்லாப் பாசங்களு மொழிதலிற் சிவதுரியமுண்மையாய் நிகழு.... சித்தாந்தத்திற் கூறும் தசகாரியானுபவமும் ஈண்டடங்குமென்கின்றது. அவ் வாறு வருந் தசகாரியம் ஞானசித்தியில்,

**देव्युवाच—**

परमेश महेशान परात्पर परःशिव ।
सिद्धान्तमार्गसम्बोधं किंप्रकारं तदुच्यताम् ॥

**ईश्वर उवाच—**

शृणु देवि महाभागे शिवसिद्धान्तलक्षणम् ।
पाशः पशुः पतिर्ज्ञेयं त्रिपदार्थं त्रिनिर्णयम् ॥
पाशः पशुः पतिर्मध्ये तृतीयेच्छा तु दीक्षया ।
नवमं चैव सिद्धान्ताधिकारो भवतोदितः ।
तस्माद्दशविधा दीक्षा पशुपाशपतिक्रमात् ॥
प्रथमं तत्वरूपं तु द्वितीयं तत्वदर्शनम् ।
तृतीयं तत्वशुद्ध्यर्थं चतुर्थं चात्मरूपकम् ॥
पञ्चमं चात्मदृश्यं तु षष्ठं चाप्यात्मशोधनम् ।
सर्वतत्त्वं चतुर्भेदं मायाकुण्डलिनोद्भवम् ॥
पूर्वोक्तस्य स्वकर्तव्यं तत्त्वत्रयविशेषतः ।
तत्वरूपमिदं तत्व तत्वदर्शनभावनम् ॥
तत्वशुद्धिः पृथग्भावं तत्वशून्यस्थितिं कुरु ।
अरूपा वर्णचैतन्यमविकारान्तगोचरम् ॥
अभिन्नभिन्नरूपत्वं तत्वमात्मस्वरूपकम् ।

अविकारोत्पन्नया तत्र प्रज्ञात्वं नाणुरूपकम् ॥
तद्वयाप्तं चेतनारूपं तत्सर्वं सुप्रकाशितम् ।
तद्व्योमसम्भवत्यर्थं तदवस्थात्मशोधनम् ॥
रूपारूपं द्विधा शून्यं तुर्यातीतं परं शिवम् ।
तत्पदं परमं स्थाणुं तत्वातीतं परं शिवम् ।
(अथ शिवदर्शनविवेकः)
अणोरणीयान्महतो महीयान् आत्मा गुहायां निहितोऽस्य जन्तोः ।
उपाधिशून्यं स्वयमात्ममध्ये प्रकाशते ज्ञप्तिपरानुभावः ॥
स्वजीवपरयोरैक्यं शिवयोगं शिवोद्भवम् ।
दशावस्थामतिक्रान्तं ... ... ... मशनम् ॥
स्वरूपसत्यादिगुणं वाक्यलक्षणशोधनम् ।
सत्यानन्दमहाज्योतिः शिवभोगानुभूतिकम् ॥

என வருமாற்றுன் உணர்க. முற்கூறியவாறே கழிந்த நவாவத்தையபிமானிகளாவர்.

"ஒன்பா னவத்தையு ளோன்பா னபிமானி
நன்பாற் பயிலு நவதத் துவமாதி
யோன்பா னனவத் துரியத்து நிற்பர்
செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே." (2545)

"முத்துரி யத்து முறை...கண்டபின்
பத்தும் பிரமன் றிருமால் பகரிறை
சுத்தம கேசன் சதாசிவன் றெல்விந்து
உய்த்திடு நாசஞ் சிவஞ்சத்தி யுண்மையே."

என வருமாற்றுன் உணர்க. ஈண்டுச் சத்தியைப் பின் கூறியவதனுற் பராசத்திக்கு மூலமான பரசிவனேடு கூடப் பத்தெனினுமாம். அது,

"மேவும் பரசிவ மேற்சத்தி நாதமும்
மேவும் பரவிந்து வைம்முகன் வேறீசன்
மேவு முருத்திரன் மால்வேதா மேதினி
யாவும் படிபடைப் போனர ளுமே." (2417)

என வருமாற்றுன் உணர்க. பா....மேல் வரும் பிரணவபேதங் குறித்து உபாதியாகலிற்........பரமென்னும்................கினகீழாமென்க. இவ்வாறு சத்தி பேதங்களும்,

" ஆதிபரா பரையாகும் பராசத்தி
சோதியின் ஞானந்தொழிலிச்சை...நின்ற
பேதமதாம் விந்துநாதம் பெருங்கலை
யேதமில்.........தியியைந்தே."

எனவும் பிறவும் வருமாற்றான் உணர்க. இவ்வாறு ஞான சித்தியிலும்,

जीवावस्था परावस्था शिवावस्था नवान्तकम् ।
नवतत्वं नवावस्था नवावस्थान्तगः शिवः ॥
ब्रह्मा विष्णुश्च रुद्रश्च ईश्वरश्च सदाशिवः ।
परबिन्दुः परो नादः परा शक्तिः परः शिवः ॥
नवतत्वलयस्थाने नृत्तानन्दमयो गुरुः ।

எனவும்,

शिवः शक्तिर्द्विधानादबिन्दुः सादाख्यपञ्चमः ।
ईशो रुद्रस्तथा विष्णुर्वेधाग्रं मूर्तयो नव ॥
इच्छाज्ञानक्रियामाया परबैन्दवतारकाः ।
कुटिला कुण्डली भेदा नवप्रधानशक्तयः ॥
नवं प्राधान्यमूर्तिश्च नव वै बन्धकारणम् ।

எனவும் வருமாற்றான் உணர்க. ஈண்டுப் பிரதான சத்திகள் எனவே அவாந்தர பேதமூர்த்திகளுக்களவில்லை என்பதாம். அது ஞானசித்தியில்,

एतच्छक्तिमयं विश्वं विश्वातीतं परात्परम् ।
शिवशक्तिद्विमध्यस्थे नादबिन्दुस्तथोदितः ॥
नादबिन्दुद्विमध्यस्थे पञ्चसादाख्यमुद्भवम् ।
पञ्चसादाख्यमध्यस्थे अष्टविद्येश्वरोदितम् ॥
अष्टविद्येश्वरमध्ये रुद्रभेदस्तथोदितः ।
रुद्रभेदस्वमध्यस्थे षट्कोटिविष्णुसम्भवः ॥
षट्कोटिविष्णुमध्यस्थे शतकोटिब्रह्मणो भवः ।

என வருமாற்றான் உணர்க. அவ்வாறு சத்திபேதத்திலும் வருமாறு. அதிலேயே

इच्छाज्ञानक्रियामध्ये नवशक्तिस्तदुद्भवा ।
इच्छाज्ञानक्रियामध्ये ... ह्यप्रभुमान्त्रिका ॥
क्रियाशक्त्युद्भवं शेषं वाक्शक्तिः पञ्चमस्तथा ।
परापरात्पराकारं शिवशक्तिस्तदुद्भवा ॥

எனவும் பிறவும் வருமாற்ருன் உணர்க. இவ்வாறு நவாவத்தையபிமானி மூர்த்திகளுஞ் சத்திகளும் கழலவே எல்லாப் பந்தங்களுமே போமென்றதாயிற்று. அது,

नवं प्राधान्यमूर्तिश्च नव वै बन्धकारणम् ।

என்பதனுலும் விளங்கும். இதனுனேயன்றே சித்தாந்தத்திலும்,

*" சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவந் திகழு மீசன்*
*உவந்தரு ளுருத்தி ரன்ருன் மாலய னென்றி னென்ருய்ப்*
*பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மோன்ருய்*
*நவந்தரு பேத மேக நாதனே நடிப்ப னென்பர் "* **(சித்தி. சுபக். 164)**

*" சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மனிதா னுகி*
*யொத்துறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி*
*வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தி யாகு*
*மெத்திறம் நின்ரு னீச னத்திற மவளு நிற்பள் "* **(சித்தி. சுபக். 165)**

என வருவதூஉம். இந்த நவமூர்த்திகளையே முன்னர்,

" தொற்பத விசுவன் றைசதன் பிராஞ்ஞன்
நற்பத விராட்டன்பொன் கர்ப்பனவ் வியாகிருதன்
பிற்பதஞ் சிற்சொலிதன் பிரசாபத்தியன்
பொற்புவி சாந்தன் பொருந்தபி மானியே " **(2537)**

..........படி ..........விசுவன்றைசதன் எனக்கூறியதூஉம். இனிச் சீவபரசிவமென்னு மூன்ற.... சதாசிவமென்பாருமுளர்.

*" தன்னைப் பரனைச் சதாசிவ னென்கின்ற*
*மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற*
*முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை*
*யுன்னத் தகுஞ்சுத்த சைவ ருபாயமே "* **(1432)**

என வருதலின். இனி ஞானசித்தியில்,

असिपदं शिरूपं द्वयोरैक्यं प्रकाशितम् ।

என வந்தவாறே, சூதசங்கிதையில்,

जीवेश्वरत्वरहितः केवलः स्वप्रभः शिवः ।

என வருதலின்.

जीवेश्वरत्वादिकल्पनारहितः केवलोऽद्वितीयः स्वप्रभः स्वयंप्रकाशचैतन्यरूपः शिवः कूटस्थः எனக் கூடஸ்ததீபிகையிற் கூறியதுங் கண்டுகோள்க. இதனுற் கூடஸ்தத்வம் உபாதியாகலின், மேற் சுவருப பிரகாசமான குருவடிவே ............... திகமேன்றுந் தோன்றியவாறு, மாயாவாதிகளிவ்வாறு கூறிச் சீவ சாட்சிக்கு மீசுவர சாட்சிக்குமே ஐக்கியம் கூறுதலுமுளதாகலின். இவ்வாறு வரு மகா வாக்கியத்தைத் தூலப் பிரணவமென்றது ஞானசித்தியில்,

अकारोकारमकारश्च शिरसि प्रणवस्य तु ।
शिवजीवपरैरैक्यं स्यात् त्रिपदीलक्ष्यलक्षणा ॥
शबला परितं भेदं तन्मध्ये ... द्धरोत्तमम् ।
जीवः परः शिवो मुक्तिस्तद् व्याप्यस्तस्य लक्षणम् ॥

என வந்தவாறே திருமந்திரத்திலும்,

"அகார முயிரே யுகாரம் பரமே
மகாரஞ் சிவமாய் வருமுப் பதத்துச்
சிகாரஞ் சிவமே வகாரம் பரமே
யகார முயிரோன் றறையலு மாமே." (2503)

என வருமாற்றுனுணர்க. ஈண்டுச் சுத்த பஞ்சாக்கரமும் தத்துவமசிவாக்கியமாம் என்பது,

तत्पदं तु शिकारं स्याद्वाकारं त्वंपदं तथा ।
असिशब्दो यकारश्च महावाक्यस्वरूपकम् ॥

என்னுமாகமத்தாலுணர்க. இதனுனே அனைத்திற்கும் பிரணவ மூலமேன்றுமாம், அது திருமந்திரத்தில்,

"ஓங்காரத் துள்ளே யுதித்தவைம் பூதங்க
ளோங்காரத் துள்ளே யுதித்த சராசர
மோங்காரத் துள்ளே யுயிர்மூன்று முற்றன
வோங்கார சீவ பரசிவ ரூபமே." (2677)

என வருமாற்றுனுணர்க. ஈண்டு உயிர் மூன்றேன்றமையிற் சகலர்க்கு மும்மலமு முளவாகலின், அவர்கள் மாயேய நீங்குமளவிற் பிரளயாகலராயும் கன்ம

மாயையும் நீங்குமளவில் விஞ்ஞானகலராயும்....வருதலின் மூவகை யுயிரிலக்கண முந் தோன்றுமாற்றான் மற்றைப் பிரளயாகலர் விஞ்ஞானகலர்க்குஞ் சிவனருளு முறை யறிந்தருளுதல் கண்டுகொள்க அது,

"தோந்தத் தசிமூன்றில் தோல்கா மியமாதி
தோந்தத் தசிமூன்றில் தோல்தா மதமாதி
வந்த மலங்குண மாளச் சிவன்தோன்றல்
இந்துவின் முன்னிரு ளேகுத லொப்பே." (2489)

என வருமாற்றான் உணர்க. பிறவும் விரித்துக்கொள்க.

* * *

99

"வருமிந்த வவத்தைகளிற் றுரியம்" என்பது துரியத்தியல்பு கூறுமுகத் தாற் றூலப் பிரணவாவத்தை முடிவுகூறி...........சொருபமடியாய் மேற்குறித்த வோங்காரத்தியல்பு சொல்லத் தோற்றுவாய் செய்கின்றது. துரியத்தைப் பாழென்பது.

"மத்த மாம்புலன் மாறிய விடத்தே.........
வெளிப்படு மொருபாழ்
பெத்த மாமுயிர் மாறிய விடத்தே பெரிய நற்பரம்
வெளிப்படு மொருபாழ்
முத்த மாம்பர மாறிய விடத்தே மூல நற்சிவம்
வெளிப்படு மொருபாழ்
சித்த மாஞ்சிவ மாத ... .... ... தலைப்படுஞ்
சிவப்பிர காசம்,"

எனவும், ஞானசித்தியிலும்.

आत्मा परःशिवश्चैते त्रिपदार्थास्त्रिचेतनाः ।
त्रिशून्योदयसम्भिन्ने - त्वं तदसीतिसम्भवम् ॥

எனவும் வருமாற்றான் உணர்க. இவ்வாறு வருந் தசாவத்தையிற் சர்வ பாசங் களும் ஒழிதலின் ஆன்மாச் சுத்தனாவன்.

.... .... कादि मलत्रैधामस्याभिगुणत्रयः ।
त्वं तदस्येति तन्मध्ये मोचनं शुद्धमात्मनः ॥

என முற்கூறியவாறே ஞானசித்தியிலும் வருதலின். இவ்வாறு நிகழுந் தூலப் பிரணவாவத்தையன்றி மேலுஞ் சூக்கும வோங்காராதி அனுட்டானங் கூறுவ

தென்னேயோ எனின், வாசனேயாயெல்லா மலங்களு மிருத்தலின் அந்த ஆணவமல சம்பந்தியாயப .... ருணவமலங்களு நீங்காதிருக்குமாகலிற் பின்னுமனுட்டானம் பண்ணவேண்டுதலினவையும் வேண்டுமென்க. இது முன்னும் கூறினும்; மேலும் விளங்கும்.

100 * * *

"பகர் சோரூபத்துயர்" என்பது சோச்சோரூபத்தியல்பு கூறுமுகத்தாற் சூக்கும வோங்காரத்தியல்பு சோல்லுதுமென்கின்றது. ஈண்டுப் "பகர் சோரூப" மென்றது முன்னுண்மை என்னும் குரு சுவரூபமான சிவபோகமாவது, பரிபூரண சித்தியில்,

" அப்படி யிருந்து நீயங் கனுபவித் தானந் தித்த
வோப்பறு சத்தி யென்னும் பேருடை யுபசாந் தத்தைத்
துப்பற விழுங்கு மந்தத் துரியமாஞ் சோயம்ப்ர காசங்
கப்பற வளிப்பன் மைந்தா கண்டுகோள் கருதி யென்ருன் "

" மத்துறு தயிரேன மறுகி யுள்ளுடைந்
தெய்திட லறவேனே யாண்ட வேந்தையே
சுத்தியந் துரியமேன் சுயம் ப்ரகாசமா
மத்தம தடியனுக் கருள வேண்டுமே "

" அத்திறம் வேத மகண்டமா மோழியா
லவனிவ னேனுமது திகழ
வோத்தெழுநீல மணமுருச் சோபை
யுற்பல மேனவோரு தனிலே
சத்திய ஞான வநந்தவா நந்தந்
தயங்கிய சுயம்பிர காச
வித்திற மாகு மேனவிறை மௌந
மோழியினு லியம்பிவீற் றிருந்தான

எனவும் நிராமயதேவர் நூலின்,

" யாவையுஞ் சிவமே யாதி யல்லவா மானந் தத்து
மேவுசை தன்னி யந்தான் மிகுதரு சோரூபமாகும்
ஓவுமுன் ருும்ப தத்தா லுறுதரு சோரூப மோதி
லாவயிற் சத்தி சத்ய ஞானவா னந்த மாமால் "

" சத்திய மான்ம ஞானந் தற்பர ரூபந் தான
மேத்திடு மனந்த மந்தச் சிவன்மிகும் தன்பா லந்தத்
துய்த்தவா னந்த சத்தி யாவது சோச்சோ ரூபம்
மேத்திடுங் குணம் விபூதி யிவற்றினுல் விளங்கு மன்றே "

" கூறிய சொரூப மாதி நான்குடன் குறிக்குங் காலை
தேறிய நிறமே கந்தஞ் சீர்த்திறஞ் சோபை நான்கு
மாறிலா நிலவு... திடையியையுமா போற்
கூறிய நான்கு மேலைச் சொரூபமே கவர்ந்துகொள்ளும் "

" செய்திடு மிதனுற் சீர் ... ...
... சீவன்மிக்க பரசிவம் மேலைச்
சத்தியுய்தரு நான்கு மேலைச் சே ...
ததினுடலதனுலே மெங்குந் தானே
சொரூபமாயிரு ... ... ... லகா "

எனவும் பிறவும் வருமாற்ருன் உணர்க. இவ்வாறு திருமந்திரத்திலும்,

" சொரூப முருவங் குணந்தோல் விபூதி
யரியன வுற்பலத் தாமாறு போல
மருவிய சத்தியாதி நான்கு மதித்த
சொரூபத்திரு நந்தி சொல்லிறந்தானே " (2843)

" சத்திய ஞானமே ஞான மநந்தம்
மெய்த்தகு ஞேய மிகவுற்ற வானந்த
முற்றிய ஞாதுரு மூன்றிலும் தோன்ருன்
சுத்தக் குரவன் சொரூபத்துளானே "

எனவும் பிறவும் முன்னுதாகரித்தவாற்ருனுணர்க. இனி "உயர் சிவமும் பரமும்" என்றற்ருெடக்கத்திற்கு வருமாறு.

" அன்றியே சொரூபந் தன்னு
லதிசிவ பரமான் மாவிற்
றுன்றிய தோற்ற வியாத்தி
நூன்முகம் சொல்லுங் காலை
நன்றுறு நனுக்க னுவே
நாடிய சுழுத்தி தன்பாற்
றுன்றிய சொச்சொ ரூபந்
துரியமாய்த் தோன்று மன்றே "

" அன்னது புரிந்த போதி
லனுபவ மெங்ங னென்னிற்
றுன்னழ லிரும்பு நீரே
நிகரெனச் சொல்லும் வேத
மன்னிய சொரூப மற்றச்
சிவம்பர மான்மா மாயை
துன்னிய முப்பாழ் நாற்பாழ்
தொலைவுறக் காத்த லாலே "

என்னும் நிராமயதேவர் நூலாற் சோச்சோரூப தரிசன அனுபூதி கூறுமாறு காண்க. எனவே நீலோற்பல வாக்கிய சித்தியந்தம் நாற்றுரியம் தூலப்பிரணவ மென்னும் மகா வாக்கிய வவத்தை யெனவும், அதன்மேற் "பகர் சோரூபத்துயர் சிவமும் பரமு" மென்னும் செய்யுளாற் சோச்சோரூபானுபவ மென்னும் சூக்கும வோங்காரத்திற் சிவமும் பரமுமான்மாவு மெனத் தோற்ற வியாபக வோடுக்க மென்னுஞ் சாக்கிரஞ் சோப்பனஞ் சுழுத்தியினிகழு மூன்று சைதன்னிய பேதமும் ஒன்றே. தசாவத்தையிற் சீவ பரசிவமென வோரறிவே மூன்றுனவாறு போலென்க. இந்தச் சூக்கும வோங்காரத்தின் முப்பாழ் காத்தலாவது தூலப் பிரணவத்தினிகழும் முத்துரியங்...............பாழ்காத்தலாவது அந்த நீலோற்பல வாக்கிய சித்தியடியாகப் பிறந்த சூக்கும வோங்காரத்தின் நால்வகைத் துரியமுங் காத்தல். அது முன்னர்,

"இந்தமகா வாக்கிய சித்தித்துரியம் நான்கி
னிறுதியின்கட் சோரூபமுத்தி காரண மென்றுக
வந்த சோச்சோரூப முத்திவகை மூன்றுந்தான்
வருசூக்கு மப்ரணவமா மிம்மூன்றிற்கு
முந்து சூக்கும மதிசூக்கும மகாசூக்குமமென்
றுரைப்பது காரணமென்னச் சோரூபங் கூடத்
தந்திடு நான்முத்தியுமே சூக்கும வோங்காரந்
தானிதுவே தாரமெனும் பிரணவங்காண்..."

எனக் கூறியதனுல் உணர்க. இவ்வாறு சூக்கும வோங்காரானுபவத்தைப் போதுப்படச் சோல்லி மேல் இதன் பேதமான சூக்கும அதிசூக்கும மகா சூக்கும மென்னும் மூன்றினனுபவமுஞ் சிறப்பித்துச் சோல்லுது மென்பது தோன்றச் "சேப்புது மேற் சூக்கும வோங்காரத்தினிலையே" என்றது. பிறவும் விரித்துக் கோள்க.

101 * * *

"அப்படியாஞ் சோச் சோரூபந்தான்" என்பது அம்மூன்றனுடைய சூக்கும வோங்காரானுபவம் கூறுகின்றது. அது நிராமயதேவர் நூலில்,

"ஒழிவி லா......ச் சோரூபமான வுணர்விறுற் சோரூபத்தோடு
கழிவுறு சிவன்ப ரான்மா வியாபகங் கரையக் கண்டங்
கழிவுறு விடல்க......ருவே யாதிமுன் ரும தற்றுத்.........
தோழவுறு துரியஞ் சூக்கச் சோரூபமாய்த் தோன்று மன்றே"

"ஆங்கதிற் சுவானு பூதி யதுதனை யறியுங் காலை
யோங்கிய லவணம் நாழி யப்போரு நாழியோன்றி
யாங்கோரு நாழி யாமா றேனவவை யகத்த டங்க
நீங்கலச் சுவானு பூதி நேயமாய் நின்ற தன்றே."

என வருமாற்றுன் உணர்க. அவ்வாறு திருமந்திரத்திலும்.

" அப்பினில் உப்பென வத்த னணைந்திட்டுச்
செப்பு பராற்பரஞ் சேர்பரம் விட்டுக்
கப்புறு சொற்பத மாளக் கலந்தன்மை
யெப்படி யப்படி யென்னுமவ் வாறே." (2945)

என வரும்.

102 * * *

" மற்றதி சூக்கும சொரூப" மென்பது சூக்கும வோங்காரத்தின் பேதமான அதி சூக்கும மகா சூக்கும வோங்காரானுபவ மாமாறு கூறுகின்றது. இவ் விரண்டனுள் அதிசூக்கும வோங்காரானுபவத்திற்கு வருமாறு, திருமந்திரத்தில்,

" கரியுண் விளவின் கனிபோ லுயிரு
முரிய பரமுமுன் னேதுஞ் சிவமு
மரிய துரியமே லகிலமு மெல்லாந்
திரிய விழுங்குஞ் சிவபெரு மானே," (2593)

என வரும். இவ்வாறு நிராமயதேவர் நூலும்,

" அதிசூக்கச் சொரூபந் தன்னற் சூக்குமச் சொரூப மென்றித்
துதியாற்று சொச்சொ ரூபந் தொல்சிவம் பரம்ப ரான்மா
விதியாற்கண்ட வற்றின் வியாத்த...வுண் டிட்டு விட்ட
துதியாற்றத் துரியந் தோன்று மதிசூக்கச் சொரூபந் தானே."

" வேழ முண்ட விளாங்கனி நேர்தா
மாரு மவ்வதி சூக்கச் சொருபமுற்
றூழ டைந்திட வென்றே யுயர்மறை
சூழு மந்தந் துதிபெறச் சொல்லுமே,

என வரும். இனி "மற்று மகா சூக்குமத்திற்றுரியம்" என்பதற்கு வருமாறு நிராமயதேவர் நூலின்,

" அன்றிமா சூக்க மான சொரூபமே யடைந்த காலை
யொன்றிய மயிர்க்கா ரேறு மொழிவிலா னந்த மாகு
மொன்றிய துரிய நான்கா லுற்றிடு மவத்தை பத்தா
நின்றிடு மான்ம பேத நிகழ்வுகோண் டெனவே காண்டி."

என வரும். இங்ஙனம் கூறும் பிரணவபேதங்கட்கு மான்மா யொன்றேயென்று மீண்டுந் தோன்றக் கிடந்தது. இவ்வாறு திருமந்திரத்தும்,

" ஓது மயிர்க்கா ரேறுமமிழ் தூறிய
பேத மபேதம் பிறழாத வானந்தத்
தாதி சொருபங்கண் மூன்றகன் றப்பாலே
வேதம் ஓதுஞ் சொருபிதன் மேன்மையே." (2856)

என வரும்.

103 * * *

" இத்திறத்தாற் சோருபமோ " டென்பது சூக்கும வோங்கார பேதமான........ யனுபவ முணர்த்தியவாற்றுற் றூலப் பிரணவ சித்தி முடிவிற்குப் போல இந்தச் சூக்கும வோங்கார பேத முடிவினும் நீலோற்பல வாக்கிய சித்தியாமாறு கூறு கின்றது. அது வருமாறு, நிராமயதேவர் நூலின்,

" ஒன்றிய துரிய நான்கா லுற்றிடு மவத்தை பத்தா
நின்றிடு மான்ம பேத நிகழ்வுகோண் டெனவே காண்டி "

என்றதன்பின்,

" மா விசுவன்மாதைவதன் மாப்பிராஞ்ஞன்
மருவுமூன்று ெ......மிரணியகெற்பனவ்வியா
கிருதனெ......மாவமாசோ......தை பிரசா
பதியென மருவுப......யான்மருமாமே
லதுரிய நான்கி னென்பானும் "

" ஆதலா ... ... ... சோருப
சூக்கும மதிசூக்கும் ... ...
... ... சூக்கு நான்காஞ் சொருபமே
யுரைக்குங் காலைத்
தீதில் சூக்குமாகா ரத்தின் செய்கையாஞ்
சீவனல்லாற்
போதமாம் பரஞ்சிவம் பின் சோருபந்
தூலம்புகன்றல் ... ...

" தத்துவம் விட்ட சீவன் பரசிவன் சொருபந் தானும்
உய்த்திடு துரிய நான்கா லுளதுதூ லத்தோங் கார ...
சுத்தமாஞ் சோருபஞ் சூக்ம மதிசூக்ம மிகுமாசூக்மத்
தோத்திடு சோருபம் நான்காந் துரியமச் சூக்க மாகும். "

" அன்னதிற் சோச்சோ ரூப மாதியாந் துரிய மூன்றுந்
தன்னுறு சத்தி யாதி நான்கெனத் தான்மே லாகத்
துன்னுமா சூக்க மான சோருபமே சூழக் கோடாய்
தன்னையு முற்ப லம்போற் சாற்றநீ சமைந்து கேளே. "

என வருமாற்றுன் உணர்க. ஈண்டுச் " சத்தியாதி நான்கு " என்றது சத்தியாம் ஞானம் முதலிய நீலோற்பல வாக்கியத்தினிகழும் நான்குமே சிவ சத்தியாதி யென்றும் பிறவும் விரித்துக்கோள்க.

104 * *

"நீல நிற மணம்" என்பது தூல பிரணவ முடிவிற்குப் போலச் சூக்குமப் பிரணவ முடிவினும் கூறும் நீலோற்பல வாக்கிய சித்தியாமாறு கூறுகின்றது. ஞானசித்தியிலும்,

एवं तत्त्रिपदं शुद्धं लक्षणार्थं तदुच्यते ।
शिवानन्दं महादेवि सत्यज्ञानमनन्तकम् ॥
आनन्दान्तस्थितज्ञप्तेस्तत्स्वरूपं प्रकाशितम् ।
सत्यं ज्ञानमनन्तं च आनन्दं चतुरुद्भवम् ॥
सत्यात्मतत्परज्ञानशिवानन्दं त्रिधा गुणाः ।
आनन्दाः शक्तयो योज्यं तत्प्राप्तं सद्गुरोः पदम् ॥
स्वरूपं तत्र रूपं च गुणत्रय विभूतयः ।
एतच्चतुष्प्रकारार्थं सत्यादिगुणसंपदम् ।
रूपं गन्धं गुणं शोभा यथा उद्भवमुद्भवम् ।
तथैवेत्यादि तद्भेदं स्वरूपं तस्य उद्भवम् ॥
ज्ञानज्ञेयज्ञातृकान्तं त्रिपदार्थं समुच्यते ।
तस्मात्स्वरूपं तत्रापि प्रकाशानन्दविग्रहम् ॥
तत्प्राप्तिस्तत्परा परा मुक्तिः शिवजीवैक्यसम्भवम् ।

என வரும். இது தூலப்பிரணவ முடிவினிகழு நீலோற்பல வாக்கிய சித்தி. இவ்வாறீண்டுக் கூறியது.

"நீலநிற மணஞ்சோபை பலவும் விசேடணமாய்
நிகழ் நீலோற் பலவுருவாம் விசேடி யத்திற்
சாலவரு பலவுமோன்ருய் முடிவு மாபோற்
சத்திய ஞானனந்தஞ் சீவபரன் சிவமா
யேலவருஞ் சொருபமா யுடலி லடங்கினவாறு
... ... ... ... ... ... ... ... ... ..."

"மேல தேனுந் துரியமுடல் விசயமென்ருக
மேவுமிஃதானந்த மோனமாமே."

என்பது மட்டுமென்க. இவ்வாறு சூக்கும வோங்காரத்தின் முடிவின் வரு நீலோற் பல வாக்கிய சித்தியைக் கூறியது. இவ்விடத்து முத்துரியத்தியல்பும் விசேடண மாம் என்பது நிராமயதேவர் நூலில் "தன்னையுமுற்பலம் போற் சாற்ற நீ சமைந்து கேளே" என்றபின்,

" நிறனோடு குணமுஞ் சோபை நீடுல க்ஷணம்இந் நான்கும்
முறமணி தன்னி லொன்றாய் நின்றவா…த்
திறனுறு மேலதான சொருபநான் கதுவே சோபை
பேறவுறு மானந் தந்தான் பெரியதோர் மோன மாமே."

என வருமாற்றான் உணர்க. இவ்வாறு மணி திட்டாந்தத்தால் திருமந்திரத்திலும்,

" மன்னு சத்தியாதி மணியொளி மாசோபை
யன்னதோ டொப்பு மிடலொன்று மாறது
வுன்னிய வுற்பல மொண்சீர் நிறமணம்
பன்னிய சோபை பகராறு மானதே." (2827)

" மணியொளி சோபை யிலக்கணம் வாய்த்த
மணியென லாய்நின்ற வாறது போலத்
தணிமுச் சொருபாதி சத்தியாதி சாரப்
பணிவித்த பேர்நந்தி பாதம்பற் றுயே." (2482)

என வரும். இது மணிவாக்கிய மெனினுமாம். பிறவும் விரித்துக் கொள்க.

105 * * *

"இது நிலையாய்ப் பிறக்கு மதி சூக்கும வோங்கார" மென்பது பஞ்சப் பிரணவங்களுள் தூலப் பிரணவமும் சூக்குமப் பிரணவமும் கூறி, இனி மூன்றும் பிரணவமென நின்ற வதிசூக்கும வோங்காரமென்னு முத்திராந்த முத்தி யவத்தை யினிகழும் அனுபவம் கூறுகின்றது. இந்த முத்திராந்தமென்னும் மோன முத்தியினிகழும் நாற்றுரியமான சாம்பவிதுரியம் கேசரிதுரியம் ஞானதுரியமான விம்மூன்று முத்திரைக்கு மேனிகழும் ஞானதுரிய மென்னும் முத்திராந்த துரியங் களாம். அது வருமாறு, நிராமயதேவர் நூலின்,

" ஆங்குவண் டுரியத் தாகி யகன்றிட வதன்மே லாக
வோங்குசாம் பவியே யோது கேசரி ஞான முத்ரை
பாங்கினுன் மூன்றேன் றுகப் பகர்தரு துரியஞ் பார்வை
தீங்கின்மே லகத்தே காட்டத் தெளிவோடு துரியஞ் சேரும்."

" அதிசூக்ம ப்ரணவ மீதா வதிலனு பூதி கூறிற்
றுதியாற்றுப் படுபால் தேனெய் சொல்லுசற் கரையே சேரப்
ப்திபார்க்கி லமுதோப் பாகு மென்றலாற் பகரின் மோனக்
கதியாற்றிப் பொருளே யாத்தக் கணேசனுங் காட்டினனே."

என வரும். இவ்வாறு திருமந்திரத்திலும்,

" பாலொடு தேனும் பழத்து ளிரதமும்
வாலிய பேரமு தாகு மதுரமும்
போலுந் துரியம் பொடிபட வுட்புகச்
சீல மயிர்க்கா றேறுந்தேக் கிடுமே. (2831)

என வரும்.

106 * * *

"இங்நிலேதான் சனகர் முதல்" என்பது மேற்கூறிய வதிசூக்கும வோங்காரத்திற்கு முத்திராந்தமேன வருதற்குக் காரணம் கூறுமுகத்தான் மகா சூக்குமப் பிரணவ முத்தியேன்னும் நடனமுத்தியனுபவம் கூறுகின்றது. இது நிராமய தேவர் நூலில் "தக்கிணேசனுங் காட்டினனே" யென்றதன் பின்,

"சனகனே சனந்தன் மற்றைச் சனற்குமா ரன்வே ருன
முனிசநா தனனல் வாக்கு முன்னேமுப் பாதந் தோற்றித்
தனுவிலே முத்தி காட்டித் தக்கவே தாந்தந் தன்னில்
முனமுறு ஞான மோன முறைமையா லறிவித் தானே.

என வரும். இவ்வாறு திருமத்திரத்திலும்,

"கால்காட்டு நந்தி கருணேயான் மிக்க
மால்காட்டி யென்னச் சிவமாக்கி வைத்தபின்
மேல்காட்டி முத்திரை காட்டி வேதாந்தத்தின்
பால்காட்டுந் தானுந்தன் பாதமும் காட்டுமே."

என வரும், இவ்வாற்ருன் முத்திராந்தமுத்தி யென்றதற்குக் காரணழ் கண்டு கோள்க.

இந்த அதிசூக்கும வோங்காரம் என்னும் முத்திராந்தத்திற்கு மேல் மகா சூக்கும வோங்காரம் நடனப் பிரணவானுபவம் கூறுகின்றதற்கு வருமாறு. நிராமயதேவர் நூலின்,

"உன்னலு மெழுப்ப ருனு மோடுக்கலு மென்னு மூன்றிற்
றுன்னிடவுன்...துரியந்தான்றுவாதசாந்தந்
தன்னிடை யறிவாய் நிற்கத் தக்கதாம் நடநா நந்தம்
பின்னமிப் பிரிவிலுப்பண் வைத்தறப் பெறப்பின் வைக்கும்."

"உரையுணர் விறந்திட் டுமன் கண்டதோர் கனவே யோப்பத்
தெரிதரு முணர்விற் கேற்பச் செப்புமா றுன்று மின்றி
யுரையுணர் விறந்த நட்டத் துற்றிடு மனந்தா னந்தந்
திரிதரு பழுதில் பேரா னந்தமே சேர்ந்த தன்றே."

எனவரும். இவ்வாறு திருமந்திரத்திலும்,

"உதய மெழுப்பன் மேலுற் றுடுக்கின்ற
கதிசாக் கிரங்கன வாதி சுழுத்தி
பதிதரு சேதனன் பற்றுந் துரியத் (து)
அதிசுகா னந்தம் நடானந்த மாமே".

எனவும்,

" வாக்கிய சுத்தி வருதார சோதனை
யாக்கு சொருபமென் மூன்றற்ற முத்திரை
தாக்கும் பிரணவ யோகந்தற் சுத்திமே
லாக்குமந் நாதாந்தத் தானந்த நட்டமே ".

எனவும் பிறவும் வருமாற்றுன் உணர்க. இவ்வாறு ஞானசித்தியிலும்,

मूकस्वप्नमिवाहुर्निरतिशयानन्दमात्मविज्ञानम् ।
सत्संप्रदायसिद्धं संततजातप्रकाशसद्भावम् ॥

என வருமாற்றுன் உணர்க

107 * * *

" நண்ணியிடு மற்றிதனுல் " அஞ்சாமுறைக்கணின்ற ஆனந்தப் பிரணவாநுபவங் கூறுகின்றது. அது வருமாறு. நிராமயதேவர் நூலின் "பேரானந்தமே சேர்ந்ததன்றே" யென்றதன்பின்,

" ஆதலால் ஞான மான வனுபவம் நேயத் தான
தீதிலாப் பாமும் ஞாத்ரு ஞேயமாம் சிவமுஞ் சென்றற்
றேதோனு மூன்றி ஞேடு முரையுணர் விறந்த நட்டத்
தாதியாகு மனு பூதி யதுமுத்தி யாகு மன்றே ".

என வரும். இனிக் " கண்ணியிடு முத்திபத்து " மென்பதற்கு வருமாறு. அந்நூலின்,

" சீவன் முத்தி பரமுத்தி சிவமாமுத்தி சொருபத்தில்
தோவு முத்தி மேலான சொருப நான்கோ டுறுமுத்தி
நீதிமுத் திரையின் முத்தி நீடானந்த முத்தியுட
ஞேது முத்தி யொருபதுமே வேதாந் தத்தா லுறுமுத்தி ".

" என்னவுற் றுணர்ந்த மைந்தா விதுமறை யந்த மென்ன
வொன்றிட வுரைத்த லாலே உணர்ந்துநின் றுறவே நிட்டை
நின்றுறப் புரியுங் காலை நின்செய லொழிய மாற்றி
யொன்றிரு வினையை விட்டி யருளினு லுரைத்தல் வேண்டும் ".

எனவும் பிறவும் வருமாற்றுன் உணர்க. இனி திருமந்திரத்திலும்,

" அறிவு பரஞ்சிவ மானந்தச் சோதி
பிறிவில் சொருபங்கள் பேரியல் மூன்றும்
நெறிதரு முத்திராந்த......நின்றடங்கச்
... ... சிவசித்தார ... ...

" ஞானமு ஞேயமும் ஞாதுரு வுங்கெடத்
தானு மெனது முறையு நற்றூரம்
மேனயு மேன்முத் திரையு மிறந்திட
மோன மொழிகோடு முத்தி தந்தானே".

" தூலப் பிரணவஞ் சொரூபானந்தப் பேருரை
பாலித்த சூக்கும மேலைச் சொரூபப்பேண்
ஆலித்த முத்திரை யாங்கதிற் காரணம்
மேலைப் பிரணவம் வேதாந்த விதியே" (2675)

இவ்வாறு கூறும் பஞ்சப் பிரணவங்களாற் பத்து முத்தியன்றி,

" துரிய மீராறுஞ் சொரூபமுட னுகிப்
பெரிய திருநட்டம் பேசும் பிரணவத்
துரியத் துரியமொரு மூன்று சென்றற்
றரிய பரானந்தி...தானே"

எனவும்,

" குற்றமில் மூவைந் துரியமங் குணர்ந்
தற்றவர் மேலாந் துரியத்து வைத்தற்ற
நற்பரவா னந்தம்நந தியட...
உற்றுணர் சித்தி முத்திக ளுதையமே"

எனவும்,

" தானுய வீரேண் டுரியஞ் சமைந்தற்ற
மோனுனு பூதி முடிவான வானந்த
தேனு ரமுதுண்டு சீநந்தி பாதத்தே
தானு முளமற்றுச் சாந்தமுஞ் சார்ந்ததே"

எனவும் கூறும் பன்னிரு துரியம் பதினைந்து துரியம் பதினுறு துரியமுமாகக் கூறும் பேதங்களும் கண்டுகோள்க. இவற்றுட் பதினுறு துரியமாவன:-- தூலப் பிரணவ துரியம் நாலு, சூக்குமப் பிரணவதுரியம் நாலு, அதிசூக்குமப் பிரணவ துரியம் மூன்று, மகாசூக்குமப் பிரணவதுரியம் நாலு, குருபத துரியம் ஒன்று ஆகப் பதினுறு துரியமென்பர். இவற்றுள் தூலப்பிரணவ துரியம் நாலாவன:-- சீவன்முத்தி பரமுத்தி சிவமுத்தி சொரூபமுத்தியென்னும் நான்கு. சூக்குமப் பிரணவதுரியம் நாலாவன:- தூலசுவரூபத்துரியம், சூக்கும சுவரூபத்துரியம், அதி சூக்கும சுவரூபத்துரியம், மகாசூக்கும சுவரூபத்துரியம் என்னும் நான்கு. அதி சூக்குமப் பிரணவத் துரியம் மூன்ருவன:-- முத்திராதுரியம் முத்திராந்த துரியம் நடனதுரியம் என்னும் மூன்று. மகா சூக்குமப் பிரணவ துரியம் நாலாவன:-- தூலதாரக பிரமதுரியம், சூக்குமதாரக பிரம துரியம், அதிசூக்கும தாரக பிரம துரியம், மகாசூக்கும தாரக பிரம துரியம், என்னும் நான்கு. குருபத துரியம் ஒன்று, ஆகப் பதினுறு துரியமுங் கண்டுகோள்க. இவற்றுள் ஒன்று

குறையப் பதினைந்து. மூன்று குறையப் பன்னிரண்டுமாமாறு காண்க. இவ் வனைத்தும் பஞ்சப் பிரணவபேதமென்க. இவற்றின் மேன் மூன்று கூட்டி அஷ்டப் பிரணவமென்றும், அவற்றேடெட்டுக் கூட்டி, சோடசப் பிரணவமென்றும் விரிப்பாருமுளர். அவற்றுள்ளு முன்னுரைத்த "உன்ன லெழுப்பல் ஒடுக்கமென் னும் நனவு கனவு சுழுத்தியும்" சுவரூபமாயே முடிதலின், விரித்தும் விசேட மின்றுதலினீண்டுக் காட்டிற்றிலம். அவற்றைத் தத்துவ ரத்னுகரம் முதலான வற்றிற் கண்டுகோள்க. சித்தாந்தத்திற் றசகாரியம் கூறிப் பின் பலவாக விரித் தாற்போல ஈண்டு முன்னர்த் தசாவத்தை கூறிப் பின் சூக்குமாதி பிரணவ பேதத்தாற் பலபடவிரித்ததேன்க.

शुद्धशैवं तथामुख्यं चतुष्पादं प्रणवान्तकम् ।

எனச் சுத்த சைவம் பிரணவ முடிவாயிருக்குமாற்றலவ்வாறு பிரணவ பேதமாய் விரித்ததேன்க. அவற்றுள்ளும் தூலப்பிரணவ பேதமான தசாவத்தை யீண்டுப் பிரசித்தமென்பது,

तत्सर्वं वेदरूपकम् ।
तदन्तं परजीवात्मा द्वयोरैक्यं परात्परम् ॥
शुद्धशैवं स्वसंवेद्यं शुद्धसन्मार्गरूपकम् ।
तत्संप्रदाय सिद्धयर्थं .... .... स्था विलेयक .... ....

என ஞானசித்தியிற் கூறுதலின், இவ்வாறு தசாவத்தைகட்குந் தத்துவராய சம்பிரதாயிகள் ஞானவாசிட்டத்திற் கூறியதூஉமாமென்பர், அது வருமாறு,

इदं ममेति सर्वेषु दृश्यकालेषु ... ।
जाग्रज्जाग्रमिति प्रोक्तं ... नन्दनैः ॥ 1

इतीदं त्वंपदं त्वंपदार्थदर्शनं च प्रतिपादयति

विदित्वा स चिदानन्दं मयि दृश्य परात्परम् ।
नामरूपपरित्यागो जाग्रत्स्वप्नमितीर्यते ॥ 2

इतीतं तत्पदं तत्पदार्थदर्शनं च प्रतिपादयति

परिपूर्णचिदाकाशे मयि बोधात्मना विना ।
न किंचिदन्यदस्तीति जाग्रत्सुषुप्तिरीर्यते ॥ 3

इतीदं असिपदं असिपदार्थदर्शनं च प्रतिपादयति । इत्येतदनुष्टुप्त्रयं साक्षात्कारप्रतिपादकम्

मूलाज्ञानविनाशेऽपि करणाभासचेष्टितैः ।
बन्धो न मेति स्वल्पोऽपि स्वप्नजाग्रमिति स्मृतम् ॥ 4

इतीदं कार्योपाधिपरित्यागनिष्ठां प्रतिपादयति

कारणाज्ञाननाशाद्या (दृष्टदर्शननाशाद्या) दृष्टदर्शनदृश्यता ।
न कार्या त्विति विज्ञानं स्वप्नस्वप्नमितीर्यते ॥ 5

इतीदं कारणोपाधिपूर्वकं त्रिपुटीज्ञानपरित्यागनिष्ठां प्रतिपादयति

अतिसूक्ष्मविमर्शेन बुद्धिवृत्तिस्तु चञ्चला ।
विलीयते यदा बोधे स्वप्नसुषुप्तिरीर्यते ॥ 6

इतीदं वासनोपाधित्यागनिष्ठां प्रतिपादयति ।

इत्येतदनुष्टुप्त्रयं वासनाक्षयनिष्ठाप्रतिपादकम् ।

चिन्मयाकाशमयता धीवृत्तिप्रसरे गतौ ।
आनन्दानुभवो नाम सुप्तिर्जाग्रन्निगद्यते ॥ 7

इतीदं सत्यज्ञानानन्दानुभवनिष्ठां प्रतिपादयति ।

वृत्तौ चिदानुभूतान्त आनन्दानुभवे स्थिते ।
विलीने सति यत्नेन सुषुप्तिस्वप्नमुच्यते ॥ 8

इतीदं लयसमाधिं प्रतिपादयति ।

तस्य धीवृत्तिरीशस्य केवलीभावभावनात् ।
परं बोधैकतावाप्तिः सुषुप्तिसुषुप्तिः स्मृता ॥ 9

इतीदमवश्यानुभवनिर्विकल्पसमाधिं प्रतिपादयति ।

एतदनुष्टुप्त्रयं निदिध्यासननिष्टाप्रतिपादकम् ।

सर्वावस्थास्वसावीर .... स्थः परिकीर्तितः ।
इत्यवस्थासमुल्लासविमर्शान्मुच्यते सुधीः ॥ 10

इतीदं स्वभावनिष्ठां प्रतिपादयति ।

என வருமாற்றான் உணர்க. அன்றியும்,

सविकल्पकस्तु लोकोऽयं ब्रह्म स्यान्निर्विकल्पकम् :
अहं ब्रह्मेति वाक्येन (सोऽयमर्थः) नेति नेतीति शेषितम् ।
परं पदं निराकर्तुमशक्यत्वात्तहि .... .... विभव ॥

எனவும் பிறவும் வரும் மாயாவாத ரீதியாய் வருவனவுங் காண்க. .... .... ....
அனுட்டான சித்தியால் வருமுத்தியே சுத்த முத்தியாம். அது திருமந்திரத்தில்,

" வேதாந்த சித்தாந்த மேவுஞ் சிவே
கான...போருடான - சோ கானமித்
தூதாந்த மில்லாச் சொரூபமான...சேன
ந்தான் சுத்த முத்தியே." ?

என வரும். முத்தியடைந்தோரியல்பு,

" ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன்
மோன திசையு முழுவெண் ணெண் சித்தியு
மேனை நிலமு மெழுதா மறையீறுங்
கோனொடு தன்னையுங் கொண்ட குணத்தனே " (1426)

எனவும்,

" மத்திம மாறுறு மாற்றி மலநீக்கிச்
சுத்தம தாகுந் துரியத் துரிசற்றுப்
பெத்தமறச் சிவமாகிப் பிறழ்வுற்றுச்
சத்திய ஞானானந்தம் சார்ந்தன ஞானியே " (2833)

எனவும் பிறவும் வருமாற்றான் உணர்க. இவ்வாறு ஞானசித்தியிலும்,

गोदोहमिषुपातं वा नयनोन्मीलमात्रकम् ।
सकृत्परपदे युक्तं न पुनर्भावमाप्नुयात् ॥
उदकेन विना सन्ध्या जपहोमैर्विना तपः ।
सन्धीयते परे तत्वे सा सन्ध्या सद्भिरिष्यते ॥
शास्त्रं कोटिषु कोटित्वं शिवज्ञानं तु दर्शनम् ।
स्वानुभूत्या महात्मानः सदाभावं विचिन्तितम् ।
शास्त्राचारकथं चैव कर्माचारविवर्जितम् ॥
समयाचारेण किं कार्यं लोकोचारेण किं भवेत् ।
सर्वाचारविनिर्मुक्तं स्वयमाचारमाप्नुयात् ॥

नात्र पूजा नमस्कारो न जपो ध्यानमेव च ।
केवलं ज्ञेयमित्युक्तं वेदितव्यं न किञ्चन ॥

எனவும் பிறவும் வருமாற்ருற் சீவன்முத்தி லக்ஷணங்கண்டு கோள்க.

108 * * *

"உண்மையாம் என்பது முற்கூறிய சுவரூப லக்ஷணத்தை விளங்கக் கூறுகின்றது. இவ்வியல்பிற்கு முன்னுதாகரித்தாம்.

109 * * *

"அடக்கத்திலேதான்றுரியம்" என்பது அச்சோருபத்திற்ருேற்ற மற்று முண்டாயினுமதுபிறிதோராற்ருனிகழ்தலினதனியல்பு நிர்விகாரமாய் ஒருதன்மைத் தாயென்றுமுளதேனவதனியல்பு கூறுகின்றது. அதற்கு வருமாறு குறுந்திரட்டில்,

"பொன்னிலே பூணும் புவியிலே கடமும்
புணரியிற் றரங்கமும்போல
வென்னிலே தோன்றி யென்னிலே யழியு
மெச்சரா சரங்களுமெனக்கு
முன்னிலேன் பின்னு மோன்றிலேன் யானே
முடிவிலா முதலேன்றுமோனந்
தன்னிலே தன்னுற் றனையுணர் தலும்போய்த்
தானிறைந் திருப்பது சமாதி"

எனச் சமாதியிலக்கணம் கூறும்வழியு மவ்வியல்பு தோன்றுமாறுணர்க. இவ்வாறு அறிவானந்த சித்தியிலும்,

"ஊனுண்ட துற்ற கரண முமுண்ட தோடுங்கலுண்டு
நானுண்டு நானிங் கிறந்தது முண்டு நலம்புரிந்த
தானுண்டு தானுல குண்டது முண்டுநற் சாந்தமுண்டு
கோனிங் கிருந்த படியே யிருந்த குறியெனக்கே" (313)

"ஊனில்லை யுற்ற கரண முமில்லை யுகந்துநின்ற
நானில்லை நானிங் கிறந்தது மில்லை நலம் புரிந்த
தானில்லை தானுல குண்டது மில்லை நற் சாந்தமில்லைக்
கோனிங் கிருந்த படியே யிருந்த குறியெனக்கே" (312)

என வருமாற்ருன் உணர்க. இவ்வாறு திருமந்திரத்திலும்,

"முன்னை யானேன வறியாத மூடம்போற்
பின்னை யானேன வறியாவகை பேதித்தான்
றன்னை யறியப் பரனுக்கித் தற்சிவத்
தென்னை யறிவித் திருந்தன னந்தியே" (1690)

" கண்டுங் கண்டிடக் காட்டேனு நந்தியைப்
பண்டுங் கண்டிலன் பாச விகாரத்துட்
கோண்டுங் கோண்டிலேன்...
மண்டங் கடந்த தறிந்தறிந் தேனே "

எனவும் பிறவும் வருமாற்றுன் உணர்க.

110 • • •

" இங்நிலைதா னிலையாயின் " என்பது லயநிட்டையாமாறு கூறுகின்றது. ஈண்டு நூல் விவேகத்து வாய்க்குந் தத்துவ லய சமாதி முற்கூறியவாறே யுற்பத்தியான வடைவே லயிக்கவும் பண்ணி, சுவரூப நிட்டனுகிறது. அது குறுந் திரட்டில்,

" எற்பட விளங்கும் விவேகவன் னியிரு
லெண்ணுமைம் பூதத்தை யழித்து
நிற்பன நடப்ப யாவுமற் றவற்றை
நேர்மையா மவற்றினே ராக்கி
யற்பமாம் பூத மாயையி லழித்து
மாயையாத் மாவிலே யழித்துத்
தற்பரப் பொருளாந் தன்னிலே முணைத்
தானிறைந் திருப்பது சமாதி ".

எற்றுற்போல வருவனவுங்கோள்க. இவ்வாறு முப்பத்தாறு தத்துவ பக்ஷத்தும் கண்டுகோள்க. பிறவும் பலபட விரித்துணர்ந்து தத்துவ லய சமாதியாமாறு காண்க. இவ்வாறு கருதுவது வெளியிற் பரப்பிலெல்லாம் பிரமமயமாய்ப் பார்க்க வுஞ் சமாதி கூடும். அது குறுந்திரட்டில்.

" அச்சமா முடற்பி ராணனேம் புலன்க
ளந்தநாற் கரணமஞ் ஞானத்
துச்சமா முடல்கோண் டோழிந்திடுஞ் சீவன்
றூலபூ தங்கள்சூக் கங்க
ளேச்சரா சரமு மீன்றமா மாயை
யீசனேன் பேதமோன் றின்றிச்
சச்சிதா னந்த மாகிய பரனே
தானேனச் சமைவது சமாதி."

எனவரும், இது மாயாவாதத்தில் வெகு பிரசித்தம். ஆண்டு விரிவினுணர்ந்து கோள்க. இனி லக்ஷியதியானத்தினுல் நிட்டை கூடுவது யோகமார்க்கம். அது திருமந்திரத்தில்,

" நாட்ட மிரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமு மில்லை மனைக்கு மழிவில்லை
யோட்டமு மில்லை யுணர்வில்லை தானில்லை
தேட்டமு மில்லைச் சிவனவ னாமே. (604)

எனவும்,

" கண்ணாக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணாக்கி நின்ற பழம்பொரு ளொன்றுண்டு
அண்ணாக்கி னுள்ளே யகண்ட வொளிகாட்டிப்
புண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே." (599)

எனவும் வரும். இனி "யகத்தினிற் புருவ நடு முதலாய் விதித்தவயி" னென்பது ஆதார யோக பேதம். அதுவும் திருமந்திரத்தில்,

" சந்திர பூமிக் குடன்புரு வத்திடைக்
கந்த மலரி லிரண்டிதழ்க் கன்னியாய்ப்
பந்த மிலாத பளிங்கி னொளியதாய்ப்
பந்தம்அறுத்துப் பாங்குறப் பற்றே." (5662)

என வருமாற்றானுணர்க. இவ்வாறு யோகமார்க்க மின்றியு மணியாகித் தியானத் தினிட்டை கூடுவது முன் பாதஞ்சல யோகத்திற் கூறியவாறு கொள்க.

97 • • •

"அன்றி யொன்றேனும்" என்பது .... கண்டவொண் பொருளைப்பற்றியுங் கருத்தடங்குமாறு செய்ய நிட்டை கூடு மென்கின்றது. இது .... பிராணாயாமாதி யன்றியு நிகழ்வதாம். அது ஞானவாசிட்டத்தில்,

" அறிபொருளை விட்டகன்று லழியுஞ் சித்த
மந்தநிலை வியாபார மனைத்து மில்லாச்
செறிநனவிற் சுழுத்தியா மிதனைநாளுந்
தீராத பரிசயமே செய்யச் செய்யப்
பிறிவின்முது துரியா மென்பர் மேலோர்
பிழையிலா விதனிலே நிலைமைபெற்றுக்
குறியறுமா நந்தமே காந்த சீலக்
கொள்கையா லாநந்தங் கூடு மன்றே "

எனவும்,

" நனவிற் சுழுத்தி நிலைமேவி நன்குயெல்லா முள்ளகற்றி
தனதிச்சை யில்வந் ததுபுறத்தே சமைப்பாய் சித்தமுண்டாகை
கனதுக் கமதாஞ் சித்தமறிற் கனத்த சுகமாஞ் சித்தத்தை
யுனதுட் படுத்தி யுணர்வின்மை யாலே யொழிப்பா யுணர்வுருவாய் "

எனவும் பிறவும் வருமாற்றான் உணர்க. வாசனை கழிவதற்கு முன்னுதாகரித் தேயாம்.

112 * * *

"இனியாதலினுல்" என்பது சீவன்முத்தி இயல்பிதுவேன முடித்திவ்வாறு சுத்த சைவம்போல அத்வைதமாய்க் கூறுவது. சித்தாந்தத்தும், ஸர்வஞானேத்தரம், கந்தகாலோத்தரம், தேவீகாலோத்தரம் முதலியவைகளும் சுப்பிரபேதம் அஜிதம் மகுடம் காரணம் வீராகமாதிகளு முளவேனக் கூறுமுகத்தாற் பரமுத்தி சுவரூபமுமிந்தச் சுத்தசைவப் பிரவர்த்தகரான ஆசார்யரிவர்கள் என்பதும் கூறுகின்றது. ஈண்டுக்கூறும் முத்திநிலைக்கு அறிவானந்த சித்தியில்,

" போங்குங் கனலிற் புலிங்கமு மப்பினிற் புற்புதமும்
வேங்கதி ரிந்து விரிந்தெழு மேகமு மேவுதல்போற்
றங்குஞ் சிவத்தினிற் சித்சத்தி மாயை சராசரமாய்த்
துங்கவைம் பூதங்க டத்துவ மற்றதுந் தோன்றிடுமே " 84

எனவும் குறுந்திரட்டில்,

" எழுதரு முழுது மவனியி லழிய வெழுபுவி புனலிடை யழிய
முழுதுறு புனலு மனலிடை யழிய முரணெரி வளியினி லழிய
விழுதரு வலிய துடைவளி வெளியில் விளிய அவ் வெளி தெரி யிருளில்
அழிதர விருளு மறிவினி லழிய வழிவறு நிலையறி வதுவாம் "

எனவும் பிறவும் முற்காட்டியனபோல வருமாற்ருனுணர்க. அன்றி,

" வானது கடந்தோறும் நின்ற வண்ணமே
யோனிகள் யாவையு முள்க லந்தவா
ருனதி லானது மிலனழிந்து தான்
போனது மிலனவை பொன்றும் போதுமே "

என மாயாவாதி கூறுமாறு கூறுதலானும் உணர்க. சுத்த சைவ குரவராயினுர் பரம குரவர் !

" சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவ
முவமா மகேச ருருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்ரும் பெற்ற
நவவா கமமெங்க ணந்திபெற் ருனே " (62)

என வருமிவர்கள். பின்குரவராயினுர்.

" நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திக ளுல்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிர
ரென்றிவ ரென்னே டெண்மரு மாமே " (67)

இவருள் நந்திகள் நால்வர் சனகாதி நால்வர். இவர்கள் .... .... .... னுள்ளார்.

" மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்க
னிந்திரன் சோமன் பிரம னுருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ
டிந்த வெழுவரு மென்வழி யாமே." (69)

குமாரபகவான் பால் வேதாந்த மார்க்கத்தின் வந்த ஆண்டதேவர் சந்தான மோன்று. [2] சித்தாந்த மார்க்கத்தில் சிவஞான போத வழிவந்த மெய்கண்டதேவர் சந்தானம் ஒன்று. [3] மலையமான் தேவர் சந்தானம் ஒன்று. [4] இனிச்சனந்த முனிகள் பால் வந்த சந்தானமோன்று. [5] இனிச் சனகமுனி வேதாந்த மார்க்கத்து மெய்ஞ் ஞான தேவர் சந்தானமோன்று. [6] சித்தாந்த சிவானந்ததேவர் சந்தானமோன்று. [7] பரமானந்த நாயனார் சந்தானமோன்று, [8] சனந்தனர்பால் வேதாந்தத்தின் வந்த சுவரூபானந்த யோகிகள் சந்தானம் ஒன்று. ஆக நந்திகேசுவரரால் வந்த சந்தானம் எட்டு. [9] இனி விஞ்ஞான தேவரான்போகநாதரென்னும் உருத்திர தேவரால் வந்த திருமாளிகைத் தேவர் சந்தானமோன்று. [10] வெளிகண்டதேவர் சந்தானமோன்று [11] வாமதேவர் சந்தானமோன்று. [12] உத்தமநாதர் சந்தானமோன்று. [13] கருவூர்த் தேவர் [14] இடைக்காட்டுத்தேவர் [15] திருவள்ளுவதேவர் [16] சிவவாக்கியத்தேவர் சந்தானம் நான்கு எனப் பதினறுவகை. பழையவான ஞான சந்தானங்களாற் பரம குரவர் வழி வந்த குரவர் பதினறுவரென்க. இவற்றின் பின்புளவான வைகள் [17] திருநெறிச் சந்தானம், [18] திருப்பெருந்துறைச் சந்தானம், [19] திருமழ பாடிச் சந்தானம், [20] நிறைந்த தேவநாயனார் சந்தானம், [21] சிங்கநாத தேவர் சந்தானமெனவும் பிறவும் வரும் பலவற்றுனும் பலர் ஞான குரவர்கள் உளர் என்க. பிறவும் விரிப்பிற் பெருகும். சந்தான வரலாற்றுட் கண்டு கொள்க,

77 * *

"முகந்திகழுமூர்த்தி" என்பது ஞானதேசிகர் சின்னங்களாமாறு கூறு கின்றது. அது ஞானசித்தியில்

ज्ञानमुद्राविधिःप्रोक्तस्तत्र सन्मार्गदर्शनम् ।
अनुभूतिप्रकर्तव्यं शिवानन्दोद्भवं सदा ॥
द्वादशं मार्गसम्बन्धं शृणु येवि वरानने ।
मुखं पीठं मठं देवं वर्गदर्शनषष्ठकम् ॥
आसनं गिरि गुहाचारो वर्णषष्ठकम् ।
एतत् द्वादशसन्मार्गप्रधानाचारमुत्तमम् ॥
मूर्तिरूपं मुखं ज्ञेयं दशन्धारं तु पीठकम् ।
पराशक्तिर्मठं प्रोक्तं दैवं तत्र परात्परम् ॥

